# மீலாதும் மவ்லிதும்

## ஓர் இஸ்லாமியப் பார்வை

ஆசிரியர்:
எஸ்.எச்.எம். இஸ்மாயில் ஸலபி

வெளியீடு:

ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா
தலைமையகம்,
பறகஹதெனிய,
இலங்கை.

புத்தக விபரத் தொகுப்பு

தலைப்பு:
- மீலாதும் மவ்லிதும்

நூலாசிரியர்:
- அஷ்ஷெய்க் எஸ்.எச்.எம். இஸ்மாயில் ஸலபி

வெளியீட்டு நாள்:
- மே 2016

பிரதிகள்
- 2500

நூலின் அளவு:
- 1/8 கிரவுன்

பக்கங்கள்
- 84

அச்சிட்டோர்:
- AJ Printers - Dehiwela

வெளியீடு:
- ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா
  தலைமையகம், பறகஹதெனிய, இலங்கை.

---

விலை:
- 120.00

بسم الله الرحمن الرحيم

# முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கின்றேன்.!

எல்லாப் புகழும் எத்துதியும் வல்லோன் அல்லாஹ் ஒருவனுக்கே! ஸலவாத்தும் ஸலாமும் இறுதித் தூதர் முஹம்மத்(ﷺ) அவர்கள் மீதும், அவரது குடும்பத்தினர், உற்றார் உறவினர், உத்தமத் தோழர்கள் அனைவர் மீதும் என்றென்றும் நின்று நிலவட்டுமாக!

இஸ்லாம் பூரணப்படுத்தப்பட்ட மார்க்கமாகும். குர்ஆனும், சுன்னாவுமே இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்கள். இஸ்லாத்தின் பெயரில் எந்த வணக்க வழிபாட்டைச் செய்வதென்றாலும் அதற்கு குர்ஆன், சுன்னாவிலிருந்தே ஆதாரத்தையும், வழிகாட்டலையும் பெற வேண்டும்.

குர்ஆன், சுன்னாவின் வழிகாட்டலில் இல்லாத, இஸ்லாத்தின் பெயரில் புகுத்தப்பட்ட அனைத்துப் புதிய கொள்கைகளும், வணக்க வழிபாடுகளும் அல்லாஹ்வினால் அங்கீகரிக்கப்படாத பித்அத்துக் களாகும். பித்அத்துக்கள் அனைத்தும் வழிகேடுகள் என்பதே இஸ்லாத்தின் இறுதியானதும் உறுதியானதுமான முடிவாகும்.

நபியவர்களது பிறந்த தினத்தை முன்னிட்டு மவ்லிது ஓதுவதும், விழாக்கள் கொண்டாடுவதும் மீலாது விழா எடுப்பதும் பித்அத்தான நடைமுறையாகும்.



நபி(ﷺ) அவர்களுக்கு மட்டுமன்றி ஷாஹுல் ஹமீத், முகைதீன், அப்துல் காதர் ஜீலானி (ரஹ்) போன்ற மகான்களின் பெயரிலும் மவ்லிதுகள் ஓதப்பட்டு மீலாத் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. இவை அத்தனையும் வழிகேட்டை விளைவிக்கும் நூதன வழிபாடுகளாகும். இந்நூலில் மவ்லிதில் உள்ள வழிகேடுகள் சுருக்கமாக விபரிக்கப்பட்டுள்ளன.

இந்த நூல் பல வருடங்களுக்கு முன்னர் எழுதப்பட்டதாகும். 1995 காலப்பகுதியில் மருதமுனையில் ஒரு விவாதம் நடந்தது. அதில் இள வயதுடைய நானும் ஒருவனாகக் கலந்து கொண்டேன். இரண்டு நாட்கள் நான்கு தலைப்புக்களில் விவாதம் நடைபெற ஏற்பாடாகி இருந்தது. இருப்பினும் ஒரு தலைப்புக் கூட முழுமையாக விவாதிக்கப்படாமல் விவாதம் முடிவுற்றது.

அதுதான் நான் கலந்து கொண்ட முதலும் இறுதியுமான விவாதமாகும். அந்த விவாதத்தில் நான் எதுவும் பேசவில்லை. இருப்பினும் எனக்கு விவாதம் சரிப்பட்டு வராது என்ற ஓர் உறுதியான முடிவை எடுக்கும் அளவுக்கு எனக்கது படிப்பினையாக அமைந்தது. அந்த விவாதத்திற்காக தயாரான தலைப்புக்களில் மவ்லிதும் ஒன்று. அதை ஒரு சிறு நூலாக வெளியிட வேண்டும் என்று தொகுத்தேன். பின்னர் அந்த கையெழுத்துப் பிரதி காணாமல் போனது. மீண்டும் கிடைத்த போது அதை அப்படியே உண்மை உதயத்தில் வெளியிட்டேன். தற்போது அந்தக் கட்டுரையையும் மற்றுமொரு தனிக் கட்டுரையையும் இணைத்து சிறு நூலாக வெளியிட்டுள்ளேன்.

எனது பழைய கட்டுரையில் அப்போது நான்

வாசித்து வந்த தமிழ் நூற்களின் வசனநடைச் செல்வாக்கு உள்ளது. அதில் பாரிய மாற்றம் எதுவும் செய்யாமல் வெளியிட்டுள்ளேன்.

இந்நூலை நடுநிலையாக வாசிக்கும் நண்பர்கள் மவ்லித், மீலாத் என்பன இஸ்லாத்தில் இல்லாத பித்அத்தான அம்சங்கள் என்பதைப் புரிந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்குள்ளது.

வழமை போன்று எனது இந்நூலையும் ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா வெளியிடுகின்றது. அதன் அமீர் அஷ்ஷெய்க் N.P.M. அபூபக்கர் சித்தீக் மதனி மற்றும் கௌரவ செயலாளர் A.L. கலீலுர் ரஹ்மான் M.A. அவர்களுக்கும், கணனி வடிவமைத்துத் தந்த சகோதரர் M.D.M. அஸ்லம் அவர்களுக்கும், மொழி வழுக்களைச் சீர்செய்து தந்த A.L. அப்துஸ்ஸலாம் ஆசிரியர் மற்றும் உண்மை உதயம் மாத இதழின் துணை ஆசிரியர் S. ஹுஸ்னி முஹம்மத் ஸலபி அவர்களுக்கும் இந்நூலைப் படித்துக் கொண்டிருக்கும் உங்களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் மூலம் சத்திய இஸ்லாத்தை எமது சகோதரர்கள் சரியான முறையில் புரிந்து கொள்ள எல்லாம் வல்ல அல்லாஹ் அருள் புரிவானாக!

இவன்,

**S.H.M. இஸ்மாயில் ஸலபி**
**(ஆசிரியர்: உண்மை உதயம்)**
**இல. 88/2,**
**பாடசாலை வீதி,**
**பறகஹதெனிய.**
**E-mail : salafy70@gmail.com**
**Web : www.ismailsalafi.com**



بسم الله الرحمن الرحيم

## பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! சாந்தியும் சமாதானமும் இறுதித் தூதர் முஹம்மது முஸ்தபா(ﷺ) அவர்கள் மீதும், அன்னாரின் கிளையார்கள், தோழர்கள் அனைவர் மீதும் என்றென்றும் உண்டாவதாக!

இஸ்லாம் வாழ்வின் சகல துறைகளுக்கும் வழிகாட்டியுள்ளது. இஸ்லாமிய வழிகாட்டலில் பிறந்த தினம் கொண்டாடுதல் என்றொரு அம்சம் பற்றி எங்குமே பேசப்பட்டதில்லை. நபி(ﷺ) அவர்கள் தனக்காகப் பிறந்த தினம் கொண்டாடியதில்லை. சத்திய வழிநடந்த நான்கு கலீபாக்கள் கூட நபி(ﷺ) அவர்களுக்காக பிறந்த தினம் கொண்டாடியதில்லை. நபித்தோழர்களும் கொண்டாடிய தில்லை.

அப்படியென்றால், சுவனம் செல்லும் ஸுன்னத் வல் ஜமாஅத் - நபிவழியிலும் நபித்தோழர்கள் மரபிலும் இல்லாத இந்த மீலாது, மவ்லிது என்பது வழிகெட்ட பிரிவினரின் நடைமுறை என்பது உறுதியாகின்றது.

ஷீஆக்களான பாத்திமிய்யாக்களில் ஒரு பிரிவினரால் ஆரம்பிக்கப்பட்டதே இந்த மீலாது, மவ்லிது விழாக்களாகும். இதை அறியாத சுன்னத் வல் ஜமாஅத் மக்களும் ஷீஆக்களின் இந்த வழிமுறையைப் பின்பற்றி வருகின்றனர்.

"மவ்லூத்" என்றால் குழந்தை என்பது அர்த்தமாகும. "மவ்லித்" என்றால் பிறந்த இடம், பிறந்த

நாள், காலம் என்று அர்த்தப்படும். நபியவர்களதும் வலிமார்களினதும் பிறந்த தினத்தை முன்னிட்டு அரபியில் இயற்றப்பட்ட பாடல்களை மக்கள் பாடி வருகின்றனர். அந்தப் பாடல்கள் ஷிர்க்கான அம்சங்களை உள்ளடக்கியுள்ளன. வலிமார்கள் பெயரில் உருவாக்கப்பட்ட பாடல் சொல்லும் அற்புத "கிஸ்ஸா" - கதைகள்- அவர்களை அல்லாஹ்வைப் போன்ற ஆற்றல்கள் உள்ளவர்களாக உருவகிக்கின்றன.

எனவே, ஷிர்க்கான அர்த்தங்களை உடைய மவ்லித்களைப் பற்றி எச்சரிக்க வேண்டியது காலத்தின் கட்டாயமாகும்.

ஒரு வேளை அந்தப் பாடல்கள் சரியாக இருந்தால் கூட, மார்க்கத்தில் இல்லாத ஒரு வணக்கத்தை உருவாக்கும் அதிகாரம் யாருக்கும் இல்லை. அப்படி உருவாக்கப்பட்ட அனைத்தும் நிராகரிக்கப்பட வேண்டிய பித்அத்துக்களாகும்.

இச்சிறிய நூல் இந்த உண்மையை உறுதியாகவும், தெளிவாகவும், சுருக்கமாகவும் தொட்டுக் காட்டுகின்றது. இவ்வகையில் தமிழ் பேசும் மக்களுக்கு ஒரு கொள்கைத் தெளிவை வழங்கும் முகமாக இந்நூலை வெளியிடுவதில் ஜமாஅத் மகிழ்வடைகின்றது.

எமது அமைப்பின் பிரச்சாரகரும், உண்மை உதயம் இஸ்லாமிய மாத இதழின் ஆசிரியருமான அஷ்ஷெய்க் எஸ்.எச்.எம். இஸ்மாயில் ஸலபி அவர்கள் இந்நூலைத் தொகுத்தளித்துள்ளார். அவர் மூலம் இன்னும் பல ஆக்கங்கள் வெளிவர துஆச் செய்வதுடன் எமது சகோதரர்கள் இந்நூலை வாங்கி வாசிப்பதுடன் பிற



சகோதரர்களுக்கும் அன்பளிப்புச் செய்து அவர்களுக்கும் சத்தியத்தை உணர்த்த முயல வேண்டும் என்று அன்புடன் வேண்டிக் கொள்கின்றேன்.

எல்லாம் வல்ல அல்லாஹ் எமது பணிகளை அங்கீகரிப்பானாக!

இவண்,

**N.P.M. அபூபக்கர் சித்தீக் மதனி**
**அமீர்,**
**ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா,**
**பறகஹதெனிய.**

அல்லாஹுதஆலா தனக்குக் கட்டுப்பட்டு தன்னைத் தவிர வேறு எவரையும் வணங்காமல் வாழ்வதற்காக மனிதனைப் படைத்தான். முதல் மனிதர் ஆதம்(அலை) அவர்களை பூமிக்கு அனுப்பும் போது, தன் மனவிருப்பத்திற்கு ஏற்ப வாழமுடியாது, இறைவனைத் தான் நினைத்தவாறெல்லாம் வணங்க முடியாது என்பதை பின்வருமாறு கூறி அனுப்புகின்றான்.

"நீங்கள் அனைவரும் இதிலிருந்து இறங்கிவிடுங்கள்! என்னிடமிருந்து நிச்சயமாக உங்களுக்கு நேர்வழி வரும். அப்போது என்னுடைய நேர்வழியை யார் பின்பற்றுகின்றார்களோ அவர்களுக்கு யாதொரு பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவுமாட்டார்கள் என்று கூறினோம்." (2:38)

கொலை, கொள்ளை, விபச்சாரம், மது என்பன போன்ற தவறுகளை இனம் கண்டு ஒதுங்கிக்கொள்ள மனித அறிவே போதுமானதாகும். இவையல்லாத நம்பிக்கைக் கோட்பாட்டுடன் சம்பந்தப்பட்ட அம்சங்கள் எவற்றை, எப்படி நம்ப வேண்டும் மற்றும் எவ்விதமான நம்பிக்கைகள், நடத்தைகளில் இணைவைத்தல் ஏற்படும் என்பன போன்ற அம்சங்களை இனம்காண இறைவழிகாட்டல் அவசியமாகும். இவ்வாறே அன்பு, தர்மம் போன்றவை நல்லவை என்பதை இனம் கண்டு கொள்ள மனித மனமே போதுமானதாகும். ஆனால், ஒரு வணக்கத்தை எப்படி, எந்நேரத்தில் செய்தால் இறைதிருப்தியைப் பெறலாம் என்பது பற்றிய ஞானம் மனித அறிவுக்கப்பாற்பட்ட ஒன்றாகும்.

எனவே, இறைவனின் தன்மைகள், மறுமை வாழ்வு எத்தகையது? சீரான மறுமை வாழ்வைப் பெற இம்மையை எவ்விதம் அமைத்துக் கொள்ள வேண்டும்? இறைவனை

எவ்வழி முறையில் திருப்திப்படுத்தலாம்? என்பவற்றைத் தெளிவுபடுத்த அல்லாஹ் ஆரம்பத்தில் வாக்களித்த பிரகாரம் தனது தூதர்கள் மூலம் வேத வெளிப்பாட்டைத் தொடர்ந்து அருளி வந்தான்.

ஆரம்பகால நபிமார்களின் போதனைகள், அவரவர் காலத்திலேயே தொகுக்கப்படாததினால் அந்தந்த நபிமார்களின் மரணத்தின் பின் அவர்களது சமூகத்தினால் அவைகள் மாற்றியமைக்கப்பட்டன. இவ்வாறு சங்கிலித் தொடராக வந்த நபிமார்களில் மூஸா(عليه السلام) அவர்கள் "தௌராத்" எனும் வேதத்தையும் ஈஸா(عليه السلام) அவர்கள் "இன்ஜீல்" எனும் வேதத்தையும் போதித்தனர். இவ்விரு இறைத்தூதர்களும் மக்களை விட்டு மறைந்த பின்னர் யூத, கிறிஸ்தவ புரோகிதர்களின் சொந்த யூகங்கள் அம்மதங்களில் ஊடுருவியதால் அவைகளின் புனிதம் கெட்டு அவை சீரழிந்தன.

ஈஸா(عليه السلام) அவர்கள் வானுக்குயர்த்தப்பட்டு சுமார் 600 ஆண்டுகளாக தெய்வீக வழிகாட்டலின்றி அகில உலகும் அறியாமை இருளில் மூழ்கித் தவித்தது. சிலை வணக்கம் மக்களின் மனங்களை ஆக்கிரமித்திருந்தது. மனிதாபிமான உணர்வுகள், பண்பாடுகள் என்றால் என்ன என்று கேட்கும் நிலைக்கு நல்லறங்கள் செத்துப் போயிருந்தன. மதத்தின் பெயரால் புரோகிதர்கள் மக்களை மடையர்களாக்கிச் சுரண்டி வாழ்ந்து கொண்டிருந்தனர். இறுதி நபித்துவத்தின் காலம் அண்மித்தது.

## நபியின் பிறப்பு:

இவ்வாறு முழு உலகையும் "ஜாஹிலிய்யத்" ஆக்கிரமித்திருந்த வேளையில்தான், நபி(ﷺ) அவர்கள் உலகில் பிறக்கின்றார்கள். கி.பி. 571 ரபீஉல் அவ்வல்



மாதம் பிறை 12 திங்கட்கிழமை நபி(ﷺ) அவர்கள் பிறந்ததாக நம்பப்படுகின்றது. அவரது நாற்பதாவது வயதில் "வஹி" யைப் பெறுகிறார்கள்.

## நபியை நேசிப்போம் :

நபித்துவத்தின் பின் முஹம்மத்(ﷺ) அவர்கள் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத இன்னல்களைச் சந்தித்து, சோதனைகளின் சிகரத்தையே தொட்டு, தனக்கு "வஹி" மூலம் அறிவிக்கப்பட்ட தீனுல் இஸ்லாத்தை உலகில் நிலை நாட்டினார்கள். அந்நபியை நேசிக்காமல் ஒருவன் விசுவாசியாக முடியாது. மனித உள்ளத்தில் இடம் பிடித்திருக்கும் அத்தனை உறவுகளை விடவும் சொத்து, செல்வங்களை விடவும் நபி(ﷺ) அவர்களை நேசிக்க வேண்டும் என்பதைப் பின்வரும் வசனம் தெளிவு படுத்துகின்றது.

**"உங்கள் பெற்றோர்கள், உங்களது பிள்ளைகள், உங்களது சகோதரர்கள், உங்களது மனைவியர்கள், உங்களது நெருங்கிய உறவினர்கள், நீங்கள் சம்பாதித்துள்ள செல்வங்கள், நஷ்டமடைந்து விடுமென நீங்கள் அஞ்சும் வியாபாரம், நீங்கள் திருப்தி கொள்ளும் இல்லங்கள் என்பன அல்லாஹ்வையும், அவனது தூதரையும் அவனது பாதையில் அறப்போர் புரிவதையும் விட, உங்களுக்கு மிக விருப்பமுடையவைகளாக இருந்தால் அல்லாஹ் தனது (தண்டனையான) கட்டளையைக் கொண்டு வரும்வரை நீங்கள் எதிர்பார்த்திருங்கள் என (நபியே) நீர் கூறுவீராக! அல்லாஹ் பாவிகளான இக்கூட்டத்தினரை நேர்வழியில் செலுத்தமாட்டான்."** (9:24)

இதில் அல்லாஹ்வை விட நபி(ﷺ) அவர்களை விட, அவனது பாதையில் ஜிஹாத் செய்வதை விட இந்த உலகத்தில் வேறு எவரையும் எதனையும் நேசிப்பது இறை

தண்டனைக்குரிய குற்றமாக எச்சரிக்கை செய்யப் படுகின்றது.

"**நம்பிக்கையாளர்களுக்கு அவர்களது உயிர்களை விட நபியே மிக்க மேலானவராவார்.**" (33:6)

மேற்படி வசனம், மு.்.மின் ஒருவன் தன்னை விட மேலாக அண்ணலார் மீது நேசம் கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இந்த நேசம் இன்றேல் ஒருவன் நிச்சயமாக மு.்.மினாக முடியாது.

"**ஒரு முறை உமர்(ﷺ) அவர்கள் 'அல்லாஹ்வின் தூதரே! இந்த உலகில் என் உயிரைத் தவிர ஏனையவற்றை விடவெல்லாம் மேலாக நான் உங்களை நேசிக்கின்றேன்.' என்றார்கள். இது கேட்ட நபி(ﷺ) அவர்கள் 'உன்னையும் உன் உயிரையும் விட மேலாக நேசிக்காதவரை (நீ பூரண மு.்.மின்) இல்லை உமரே என்றார்கள். உடனே உமர்(ﷺ) அவர்கள், 'என் உயிரை விட மேலாக நான் உங்களை நேசிக்கின்றேன்' என்றார்கள். இப்போது தான் உமரே (நீ பூரண விசுவாசி) என்று நபி(ﷺ) அவர்கள் பதிலுரைத்தார்கள்.**" (புஹாரி)

"**ஒருவர் தன் பெற்றோர்கள், பிள்ளைகள், முழு மனித சமுதாயத்தையும் விட மேலாக என்னை நேசிக்காதவரை உண்மை விசுவாசியாக முடியாது.**"

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ﷺ), அனஸ்(ﷺ)
நூல்: புஹாரி, கிதாபுல் ஈமான் 15
முஸ்லிம், கிதாபுல் ஈமான் 44-70

## நபி (ﷺ) அவர்களை அவமதிக்காதீர்கள்:

நபி (ﷺ) அவர்களை உலகிலுள்ள அனைவரையும் விட ஏன் எமது உயிரை விட மேலாக மதித்து



நேசிக்காதவரை நாம் விசுவாசியாக முடியாது எனக் கண்டோம். நபி(ﷺ) அவர்களை எப்படி உயர்வாக மதிக்க வேண்டுமோ அது போன்று அவர்களது சொல், செயல், அங்கீகாரம் என்பவற்றையும் ஏற்று மதித்து நடப்பது அவசியமாகும். இன்றேல் விசுவாசிகள் கூட்டத்தில் சேர முடியாது.

"**(நபியே!) உமது இரட்சகன் மீது சத்தியமாக அவர்கள் தமக்கிடையில் ஏற்பட்ட சர்ச்சையில் உம்மை நீதிபதியாக்கி, பின்னர் நீர் வழங்கும் தீர்ப்பை தம் மனங்களில் எத்தகைய அதிருப்தியும் கொள்ளாது ஏற்று, அதற்கு முற்றிலும் கட்டுப்படும் வரை, நம்பிக்கை கொண்டவர்களாக மாட்டார்கள்.**" (4:65)

மேற்படி வசனம் நபி(ﷺ) அவர்களின் தீர்ப்பை ஏற்காதோர் மு.்.மின்கள் அல்லர் என அடித்துச் சொல்கிறது. இவ்வசனத்திற்கு விளக்கமளிக்க முனையும் இப்னு கதீர் (ரஹ்) அவர்கள், நபி(ﷺ) அவர்கள் அளித்த தீர்ப்பொன்றில் திருப்தி காணாமல் உமர்(ﷺ) அவர்களிடம் மறுதீர்ப்புக் கேட்ட முனாபிக் ஒருவனை உமர்(ﷺ) அவர்கள் கொலை செய்த சம்பவமொன்றையும் குறிப்பிடு கின்றார்கள்.

(தப்ஸீர் இப்னு கதீர் பா-1, பக்-521)

நபி(ﷺ) அவர்களது தீர்ப்பைப் புறக்கணிப்பது நபி(ﷺ) அவர்களைப் புறக்கணிப்பதற்கொப்பாகும். நபிமொழியையோ நபி வழியையோ கிண்டல் செய்வது நபி(ﷺ) அவர்களைக் கிண்டல் செய்வதாகவே கருதப்படும். எனவே, அண்ணலாரின் எந்தத் தீர்ப்பையும் எந்த வழிமுறையையும் கிண்டல் செய்து அவர்களை அவமதிக்காதீர்கள்.

## நபியை நோவினை செய்தல்:

நபி(ﷺ) அவர்களுக்கு சிறியதொரு மன நோவினை ஏற்படுத்துவதைக் கூட இஸ்லாம் வன்மையாகக் கண்டித்துள்ளது.

நபி(ﷺ) அவர்களது வீட்டிற்கு விருந்திற்குச் செல்லும் ஸஹாபிகளை உண்ட உடனேயே வீட்டை விட்டு சென்றுவிடுமாறு அல்லாஹ் கட்டளையிட்டான். ஏனெனில்,

**“நம்பிக்கை கொண்டோரே! உணவுக்காக உங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டாலேயன்றி நீங்கள் நபியின் வீடுகளில் நுழைய வேண்டாம். அது தயாராவதை எதிர்பார்த்தவர்களாக இருக்க வேண்டாம். எனினும், நீங்கள் அழைக்கப்பட்டால் அப்போது நுழையுங்கள். நீங்கள் உணவு உட்கொண்டால் கலைந்து செல்லுங்கள், பேச்சில் ஈடுபட்டுக் கொண்டிருக்காதீர்கள். நிச்சயமாக இது நபிக்குத் தொல்லையளிக்கும்.”** (33:53)

அதே சூறாவின் மற்றுமோரிடத்தில் நபியை நோவினை செய்வதை,

**“நிச்சயமாக எவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நோவினை செய்கின்றார்களோ, அவர்களை அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் சபித்துவிட்டான். மேலும், அவர்களுக்கு இழிவு தரும் வேதனையைத் தயார் செய்து வைத்துள்ளான்.”** (33:57)

**“எவர்கள் அல்லாஹ்வின் தூதரை நோவினை செய்கின்றார்களோ அவர்களுக்கு நோவினை தரும் வேதனை உண்டு.”** (9:61) என்று கண்டித்துக் கூறுகின்றான்.

நபி(ﷺ) அவர்கள் கொண்டுவந்த தூய



கொள்கைகளைத் தூக்கியெறிந்தாற் போல் பேசுவது, அவரது கட்டளைகளைத் தெளிவாகப் புரிந்து கொண்டே அதற்கு எதிராக விதண்டாவாதம் புரிவது, நபி(ﷺ) அவர்கள் கொண்டுவந்த வஹியில் குறைகாண்பதெல்லாம் நபி(ﷺ) அவர்களைத் துன்புறுத்தும் செயல்களே. எனவே, இத்தகைய சொல், செயல்களைத் தவிர்ந்து கொள்வோமாக!

## நபி(ﷺ) அவர்களைக் கண்ணியப் படுத்துவோம்:

அல்லாஹ்வுடைய தூதர் இருக்கும் போது அவரை முந்திக்கொண்டு பேசுவதையும், நபி(ﷺ) அவர்கள் முன்னிலையில் உரையாடும் போது அவர்களது சப்தத்தை விட தம் சப்தத்தை உயர்த்துவதையும், நபி(ﷺ) அவர்களை எம்மில் ஒருவர் மற்றொருவரை அழைப்பது போல் “முஹம்மதே” என அழைப்பதையும் அல்லாஹ் வன்மையாகக் கண்டிக்கிறான்.

**“நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் முன்னால் நீங்கள் முந்தாதீர்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் செவியுறுபவன்; நன்கறிந்தவன்.”**

**“நம்பிக்கை கொண்டோரே! உங்கள் சப்தங்களை நபியின் சப்தத்திற்கு மேலால் உயர்த்தாதீர்கள். மேலும், உங்களில் சிலர் மற்றும் சிலருடன் சப்தமிட்டுப் பேசுவது போன்று அவருடன் சப்தமிட்டுப் பேசாதீர்கள். (ஏனெனில்) நீங்கள் உணராத நிலையில் உங்கள் செயல்கள் அழிந்துவிடும்.”**

**“நிச்சயமாக எவர்கள் தமது சப்தங்களை அல்லாஹ்வின் தூதரிடத்தில் தாழ்த்திக் கொள்கிறார்களோ, அவர்களது**

**உள்ளங்களை அல்லாஹ் பயபக்திக்காக பரிசுத்தமாக்கினான். அவர்களுக்கு மன்னிப்பும் மகத்தான கூலியும் உண்டு.**"

"**நிச்சயமாக எவர்கள் (உமது) அறைகளுக்குப் பின்னாலிருந்து உம்மை அழைக்கின்றார்களோ அவர்களில் அதிகமானோர் விளங்கிக் கொள்ளமாட்டார்கள்.**" (49:1-4)

நபி(ﷺ) அவர்களது மரணத்தின் பின் எவரும் அவரின் கூற்றை விட தன் கருத்தை முற்படுத்தலாகாது. நபி வழியை விட தன் மனோ இச்சையை மேம்படுத்தக் கூடாது. நபி(ﷺ) அவர்களை "யா முஹம்மத்" என அழைத்தல் கூடாது என்பதை 49:1-4 வசனங்களை அவதானிக்கும் போது யூகிக்க முடியும்.

இதற்கு மாற்றமாக நபி(ﷺ) அவர்களை அவமதிப்பது போல் நடந்து கொண்டால் எமது நல்லறங்கள் அழிந்துவிடும் என அல்குர்ஆன் எச்சரிக்கிறது.

"**நம்பிக்கை கொண்டோரே! உங்கள் சப்தங்களை நபியின் சப்தத்திற்கு மேலால் உயர்த்தாதீர்கள். மேலும், உங்களில் சிலர் மற்றும் சிலருடன் சப்தமிட்டுப் பேசுவது போன்று அவருடன் சப்தமிட்டுப் பேசாதீர்கள். (ஏனெனில்) நீங்கள் உணராத நிலையில் உங்கள் செயல்கள் அழிந்துவிடும்.**" (49:2)

எனவே, நபி(ﷺ) அவர்களை மதித்து, கண்ணியப்படுத்துவதோடு அவர் கொண்டு வந்த ஷரீஅத்தையும் ஏற்று மதித்து நடப்போமாக!

## நபிவழி நடப்போம்:

நபி(ﷺ) அவர்களை மதிப்பதாகக் கூறிவிட்டு அவரது வாழ்வியல் முறைகளை மிதிப்பதுபோல் நடப்பது



அர்த்தமற்றதாகும். அல்லாஹ் தன் அருள் மறையில் பல இடங்களில் நபி(ﷺ) அவர்களை முழுமையாகப் பின்பற்றுமாறு கூறுகிறான்.

"**நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான், இன்னும், உங்கள் பாவங்களை உங்களுக்கு மன்னிப்பான். அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையவனுமாவான் என்று (நபியே!) நீர் கூறுவீராக!**"

"**அல்லாஹ்வுக்கும் இத்தூதருக்கும் கட்டுப்படுங்கள் என்று (நபியே!) நீர் கூறுவீராக! அவர்கள் புறக்கணித்தால் நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பாளர்களை நேசிக்க மாட்டான்.**"

(03:31,32)

இந்த வசனங்களை நன்றாக அவதானித்தால் பல விபரங்களைப் பெற முடியும்.

1. உண்மையில் இறைநேசம் கொண்டவர்கள் நபி(ﷺ) அவர்களைப் பின்பற்ற வேண்டும். அவர்களைப் பின்பற்றாமல் இறைநேசம் கொண்டவர்களாவது முடியாத காரியம்.
2. நபி(ﷺ) அவர்களைப் பின்பற்றுவோரையே அல்லாஹ் நேசிக்கிறான்.
3. அவர்களது பாவங்களையும் அல்லாஹ் மன்னித்து விடுகிறான்.
4. நபிவழியைப் புறக்கணிப்போரை அல்லாஹ் நிராகரிப்பாளர் என்கிறான்.

எனவே, நபிவழியைப் பின்பற்றி இறை நேசத்தையும் பாவமன்னிப்பையும் பெறுவோமாக!

## புதுவழி தவிர்ப்போம்:

ஏனைய நபிமார்களை விட நபி(ﷺ) அவர்கள் தமது பிரச்சாரத்தில் பாரிய முழுமையான வெற்றியை இறையருளால் பெற்றார்கள். மற்ற நபிமார்கள் கொண்டு வந்த வேதங்கள் முழுமை பெற்றதாக இருக்கவில்லை. எனினும், இறுதித் தூதரால் போதிக்கப்பட்ட இறுதி வேதம் முழுமை பெற்ற வேதம் என அல்லாஹ் அருள்மறையிலேயே கூறுகிறான்.

**"இன்றைய தினம் உங்களது மார்க்கத்தை உங்களுக்கு நான் முழுமைப்படுத்தி விட்டேன். எனது அருட்கொடையையும் உங்கள் மீது பூரணப்படுத்திவிட்டேன். மேலும் நான் இஸ்லாத்தையே உங்களுக்கு மார்க்கமாகப் பொருந்திக் கொண்டேன்."** (05:03)

இறுதி வேதம் முழுமை பெற்றுவிட்டதால் வேதத்தில் அதன்பிறகு புதிதாக எதனையும் சேர்க்க வேண்டிய அவசியமில்லை என்பதையும் மார்க்கம் சம்பூரணமாகிய பின்னர் மார்க்கத்தின் பெயரால் உருவான எதுவும் அல்லாஹ்வின் அங்கீகாரம் பெற்றவையல்ல என்பதையும் நாம் தெளிவாக உணர வேண்டும்.

நபி(ﷺ) அவர்கள் "நான் சுவனத்தில் உங்களைச் சேர்க்கக் கூடிய அத்தனை வழிமுறைகளையும் காட்டித் தந்துவிட்டேன். அவ்வாறே நரகை விட்டும் உங்களைத் தடுத்துக் கொள்ளும் வழிமுறைகளையும் கற்றுத் தந்துவிட்டேன்" எனக் கூறினார்கள்.

எனவே, நபி(ﷺ) அவர்கள் காட்டித் தராத வழி



மூலம் இறைதிருப்தியையோ சுவனத்தையோ எவரும் பெற்றுவிட முடியாது என நாம் உறுதியாக நம்ப வேண்டும். இல்லையெனில் நபி(ﷺ) அவர்களது தூதுத்துவப் பணி முழுமை பெறவில்லை; அவர் தமது பணியில் குறைவைத்துவிட்டார் என அவதூறு கூறுவதாகிவிடும்.

எனவேதான் நபி(ﷺ) அவர்கள் தம் மார்க்கத்தில் புதிதாகப் புகுத்தப்படும் இறை அங்கீகாரமற்ற வணக்க வழிபாடுகளில் இருந்து விலகி இருக்குமாறு வன்மையாக எச்சரிக்கை செய்தார்கள்.

**"எமது ஏவலில் இல்லாததை எவர் செய்தாலும் அது மறுக்கப்படும்" என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர் : ஆயிஷா(ؓ)
நூல் : புஹாரி- 2997, முஸ்லிம்- 1718-17

**"(ஒரு முறை) நபி(ﷺ) அவர்கள் எமது உள்ளங்கள் உருகிக் கண்ணீர் சிந்துமளவிற்கு உருக்கமானதொரு உபதேசம் செய்தார்கள். அதனைக் கேட்டுக் கொண்டிருந்த நாங்கள் அல்லாஹ்வின் தூதரே! இது தங்களின் இறுதி உபதேசம் போலுள்ளது. எனவே, மேலும் எங்களுக்கு உபதேசியுங்கள் என்று கூறினோம். அது கேட்ட நபி(ﷺ) அவர்கள் 'அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள்; உங்களுக்கு ஒரு அபிசீனிய அடிமை தலைவராக்கப் பட்டாலும் அவர் சொல்வதைக் கேட்டு அவருக்குக் கட்டுப்பட்டு நடங்கள்; (மேலும்) யார் (எனக்குப் பின்னால்) அதிக காலம் வாழ்கிறாரோ அவர் அநேக கருத்து வேறுபாடுகளைக் காண்பார்; அவ்வேளையில் எனது வழிமுறை (சுன்னாவை)யும் நேர்வழி நடந்த கலீபாக்களின் வழிகாட்டல்களையும் உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். மேலும் (மார்க்கத்தின் பெயரால்**

**உண்டாக்கப்படும்) நூதன அனுஷ்டானங்கள் விடயத்தில் உங்களை நான் எச்சரிக்கை செய்கிறேன். ஏனெனில், அனைத்து பித்அத்துக்களும் வழிகேடாகும். அனைத்து வழிகேடுகளும் நரகிற்கே இட்டுச் செல்லும்." எனக் கூறினார்கள்.**

அறிவிப்பவர் : இர்பாழ் இப்னு சாரியா(ரழி)
நூல்கள்: அபூதாவூத்- 4607, திர்மிதி- 2676, அஹ்மத்- 17144, தாரமீ- 96, இப்னுமாஜா- 42

**எனக்கு முன்னர் எந்த நபிக்கும், அவர் அனுப்பப்பட்ட உம்மத்துக்களில் அவருக்கு உற்ற நண்பர்களை ஏற்படுத்தாமல் இருந்ததில்லை. அவர்கள் அந்நபியின் வழிகாட்டலை எடுத்து நடப்பார்கள். ஏவல்கள் பிரகாரம் வாழ்வார்கள். பின்னர் அவர்களுக்குப் பின் பல சந்ததிகள் தோன்றுவர். அவர்கள் செய்யாததைச் சொல்லுவார்கள்; தங்களுக்கு ஏவப்படாததையும் செய்வார்கள். இவர்களுடன் எவர்கள் தனது கரத்தால் போராடுகிறாரோ அவர் முஃமின் ஆவார். எவர் இவர்களுடன் நாவினால் போராடுகிறாரோ அவரும் முஃமினாவார். எவர் உள்ளத்தால் இவர்களுடன் போராடுகின்றாரோ அவரும் முஃமினாவார். (இதுவும் இல்லையெனில்) அதற்குப் பின்னர் அணுவளவேனும் ஈமான் இல்லை என்பதே அர்த்தமாகும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரழி)
நூல்: முஸ்லிம் ஹதீஸ் எண் -80

**"நான் ஹவ்லுல் கவ்தரில் இருப்பேன். அப்போது என்னை நோக்கி சிலர் வருவார்கள். மலக்குமார்கள் அவர்களை நீரருகில் வரவிடாமல் அடித்து விரட்டுவார்கள். நான் என் உம்மத்தினர், என்னைச் சேர்ந்தவர்கள் (ஏன் அடிக்கிறீர்கள்) என்பேன். அதற்கவர்கள் 'உங்களுக்குப்**



**பிறகு இவர்கள் மார்க்கத்தில் புதியன புகுத்தியது தங்களுக்குத் தெரியாது' எனக் கூறி மார்க்கத்தில் புதிதாக நுழைக்கப்பட்ட பித்அத்துக்களைப் புரிவோருக்கு 'ஹவ்லுல் கவ்தர்' நீர்தடாகத்தில் நீரருந்தும் பாக்கியம் கிட்டாது" என நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.**

இது புஹாரி, முஸ்லிம் உட்பட பல ஹதீஸ் கிரந்தங்களில் சுமார் எழுபது இடங்களில் பதியப்பட்டுள்ள பிரபலமான ஹதீஸாகும்.

மேற்கூறிய அத்தனை ஹதீஸ்களும் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னர் மார்க்கத்தின் பெயரால் நன்மை நாடி உருவாக்கப்பட்ட அத்தனை செயல்களையும் நாம் புறக்கணிக்க வேண்டும். அதனைச் செய்வோருடன் இஸ்லாத்திற்காகப் போராட வேண்டும் என்பதையே உணர்த்துகின்றன.

## நபி(ஸல்) காட்டித்தராத நல்வழி:

சிலர் இஸ்லாத்தில் நுழைக்கப்பட்ட பல பித்அத்துக்களை நல்ல பித்அத் எனக் கூறி நியாயப்படுத்த முற்படுகின்றனர். நபி(ஸல்) அவர்கள் "எல்லா பித்அத்துக்களும் வழிகேடாகும்" என அழுத்தம் திருத்தமாகக் கூறியதன் பின்னரும் வழிகேட்டில் நல்லதைத் தேடுவது பெரிய வழிகேடாகும்.

நபி(ஸல்) அவர்கள் காட்டித்தராத நல்ல வழிமுறைகள் இருக்கும் என நம்புவது, நபியவர்களையும் அவர்களுக்கு வேதத்தைக் கொடுத்தனுப்பிய அல்லாஹ்வையும் அவமதிப்பதாகாதா? குறைகூறுவதாகாதா?

மவ்லித் ஓதுவது நல்ல பித்அத் எனின், இந்த நல்ல

செயலைச் செய்யுமாறு கூறாத குர்ஆன் குறைவுடைய தென்றாகாதா? அல்குர்ஆன் பூரண வேதம் என்பதில் ஐயத்தை இவ்வாறு நம்புவது உருவாக்கிவிடுமல்லவா?

நபி(ﷺ) அவர்கள் சுவனம் செல்லக்கூடிய அனைத்து வழி முறைகளையும் கற்றுத் தந்துள்ளார்கள். மவ்லித் போன்றவற்றில் நன்மையுண்டெனில் அவற்றைக் கற்றுத் தராமல் விட்டிருக்கமாட்டார்கள். மவ்லித் ஓதுவது நல்லதெனில் நபியவர்கள் மவ்லித் ஓதுவதை எமக்குக் கற்றுத்தரவில்லையே என நபி(ﷺ) அவர்களது தூதுத்துவப் பணியில் நாம் குறை காண்பதாகாதா?

**"எவன் மார்க்கத்தில் புதிதாக ஒன்றை உருவாக்கி விட்டு அதை நல்லதாகக் கருதுகின்றானோ, நிச்சயமாக அவன் நபி(ﷺ) அவர்கள் தமது ரிஸாலத்தில் மோசடி செய்ததாகவே கருதுகின்றான்"** என இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் இது பற்றி கண்டித்துக் கூறுகிறார்கள்.

(அஸ்ஸுனனு வல் முப்ததிஆத் பக்:7)

எனவே, நபி(ﷺ) அவர்கள் காட்டித் தராதது எதுவும் "இபாதத்" ஆகுமெனின், அவர்கள் செயல்படுத்தாத ஒன்றின் மூலம் அல்லாஹ்வின் திருப்தியைப் பெற முடியும் எனின் அது நபி(ﷺ) அவர்களையும் அவர்கள் கொண்டுவந்த தீனையும் குறை கூறுவதாகவே அமையும்.

மேலே நாம் கூறிய அத்தனை விபரங்களையும் மனதில் ஆழப்பதிந்தவர்களாக மவ்லித் பற்றிய எமது ஆய்வில் நுழைவோம்.

## நபி பிறந்த மாதம்...?:

மவ்லித் ஓதுவோர் நபி பிறந்த மாதம் சிறப்பானது; அதனை சங்கை செய்ய வேண்டும் என்ற எண்ணத்திலேயே



அம்மாதத்தில் மவ்லித் ஓதுகின்றனர். மீலாது விழாக்கள் நடாத்தி, கொண்டாட்டம் நடத்துவோரிடம் ஏன் இவ்விதம் செய்கிறீர்கள்? எனக் கேட்டால், இது நபி(ﷺ) அவர்கள் பிறந்த மாதம் அதைச் சங்கை செய்யக் கூடாதா? என மறு கேள்வி கேட்கின்றனர்.

நபி(ﷺ) அவர்கள் தமது 63 வருட வாழ்விலும் தாம் பிறந்த மாதத்தை பலவிடுத்தம் சந்தித்துள்ளார்களே! என்றாவது அம்மாதத்தைச் சங்கைப்படுத்தவென எதையேனும் விஷேடமாகச் செய்துள்ளார்களா?

நபி(ﷺ) அவர்கள் பிறந்த பின்னர்தானே அல்குர்ஆன் அருளப்பட்டது. நபியவர்கள் பிறந்ததால் அவர்கள் பிறந்த மாதம் சிறப்புறும் எனின், அந்த அருள் மறையில் அது பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டுமே? மாதங்கள் பற்றி பல இடங்களில் பேசுகின்ற அருள்மறை சில மாதங்களைச் சிறப்பித்தும் பேசுகின்றது.

**"அல்லாஹ்விடம் நிச்சயமாக மாதங்களின் எண்ணிக்கை, வானங்கள் மற்றும் பூமியைப் படைத்த நாள் முதல் அல்லாஹ்வின் பதிவேட்டில் பன்னிரெண்டு மாதங்களாகும். அவற்றில் நான்கு புனிதமானவையாகும். இதுதான் நேரான மார்க்கம். இவைகளில் (போர் செய்து) உங்களுக்கு நீங்களே அநியாயம் செய்து கொள்ளாதீர்கள். இணைவைப்போர் உங்கள் அனைவருடனும் போர் புரிவது போன்று நீங்களும் அவர்கள் அனைவருடனும் போர் புரியுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பயபக்தியாளர்களுடன் இருக்கின்றான் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்."** (09:36)

துல்க∴தா, துல்ஹஜ், முஹர்ரம், ரஜப் ஆகிய நான்கு மாதங்களை அல்லாஹ் சிறப்புற்றது என்கிறான். அத்தோடு அருள்மறை அருளப்பட்ட ரமழான் மாதம் சிறப்பானது எனக் குர்ஆனிலேயே கூறப்படுகின்றது.

ஆயினும் நபி(ﷺ) அவர்கள் பிறந்த மாதம் சிறப்பானது என்றோ அல்லது அந்த மாதத்தில் ஏதேனும் விசேட வணக்கம் இருப்பதாகவோ அருள் மறையும் அண்ணலாரும் கூறவில்லையே.

ரபிஉல் அவ்வல் மாதம் சங்கையான மாதம் என்ற சங்கதி அல்லாஹ்விற்கும் அவன் தூதருக்கும் தெரியாமல் எமக்கு மட்டும் தெரிந்துவிட்டதோ? அல்லது அல்லாஹ்வும் அவனது தூதரும் தெரிந்திருந்தும் சொல்லத் தவறிவிட்டனரோ?

## பிறப்பா? நபித்துவமா?:

நபி(ﷺ) அவர்கள் பிறந்த தினத்தை குர்ஆனோ, ஹதீஸோ எங்குமே சிறப்பித்துக் கூறவில்லை. இருப்பினும் நபி(ﷺ) அவர்களுக்கு நபித்துவம் வழங்கப்பட்ட போது அல்லாஹ் மு.்.மின்களுக்கு அருள் புரிந்துவிட்டதாக அருள் மறை குர்ஆனில் கூறுகின்றான்.

**“நம்பிக்கையாளர்களுக்கு அவர்களில் இருந்தே ஒரு தூதரை அனுப்பியபோது, அல்லாஹ் அவர்கள் மீது நிச்சயமாகப் பேருபகாரம் புரிந்து விட்டான். அவர், அவர்களுக்கு அவனது வசனங்களை ஓதிக்காட்டி, அவர்களைப் பரிசுத்தப்படுத்தி, அவர் களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுப்பார். அவர்கள் இதற்கு முன் தெளிவான வழிகேட்டிலேயே இருந்தனர்.”** (3:164)

அல்லாஹ் முஹம்மத்(ﷺ) அவர்களைத் தூதராக அனுப்பிய போது மு.்.மின்களுக்கு அருள் புரிந்துவிட்டதாக இந்த வசனத்தில் கூறுகின்றான். இப்படிக் கூறியிருந்தும் கூட நபி(ﷺ) அவர்களுக்கு நபித்துவம் கிடைத்த தினத்தை முன்னிட்டு எந்த விழாக்களையும் இஸ்லாம் அறிமுகப்படுத்தவில்லை. இப்படியிருக்க, குர்ஆன்,



சுன்னாவில் எந்த முக்கியத்துவமும் கொடுக்கப்படாத பிறந்த தினத்தை விழாவாக்குவது எப்படி நியாயமாகும் என்று சிந்தித்துப் பாருங்கள்.

## நபி(ﷺ) அவர்களைப் புகழ்தல் கூடாதா?:

நபி(ﷺ) அவர்கள் புகழுக்குரியவர் என்பதில் இரண்டாம் கருத்திற்கே இடமில்லை. யாரும் நபி(ﷺ) அவர்களை அளவோடு எல்லை மீறாமல் புகழ்வதை ஆகாது எனக் கூற முடியாது. நபி(ﷺ) அவர்களே “நான் மனிதர்களில் தலைவனாவேன்” என்று கூறியுள்ளார்கள். நபி(ﷺ) அவர்களைப் புகழலாம் என்பதற்காக அதை “இபாதத்” எனக் கூற முடியாது. ஸஹாபாக்களில் எவரும் நபி(ﷺ) அவர்களைப் புகழவென நாள் குறித்து, நேரம் குறித்து ஒன்று கூடியதில்லை.

நபி(ﷺ) அவர்களைப் புகழும் போது கூட இஸ்லாத்தின் போதனைகளை மறந்து எல்லை மீறிச் செல்வதை நபி(ﷺ) அவர்களே தடுத்துள்ளார்கள்.

**“கிறிஸ்தவர்கள் ஈஸா(عليه السلام) அவர்களை அளவு கடந்து புகழ்ந்தது போல் என்னையும் அளவு கடந்து புகழாதீர்கள். நானோ அல்லாஹ்வின் அடியானும் தூதருமாவேன்” என்று கூறுங்கள்.**

அறிவிப்பவர்: உமர்(رضي الله عنه)

நூல்: புஹாரி- 3445, 6830, அபூதாவூத்- 24, தாரமி- 2826

**“ஒரு முறை சில சிறுமியர் யுத்த நிகழ்வுகள் பற்றிக் கவிதை பாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் அண்ணலாரைக் கண்டதும் ‘பீனா நபியுன் ய.்.ரிபு மாபீஹதின்’ எங்களிடம் ஒரு நபியுள்ளார். அவர் நாளை என்ன நடக்கும் என்பதை(இன்றே) அறிவார் எனப் பாடினர். நபி(ﷺ)**

**அவர்கள், அச்சிறுமி இவ்விதம் பாடுவதைத் தடை செய்து முன்னர் பாடிய பாடலைப் பாடுமாறு கூறினார்கள்.**"

அறிவிப்பவர்: ருபைஉ பின்தி முஅவ்வித்(ﷺ)
நூல்: புஹாரி- 4001, திர்மிதி- 1090, அபூதாவூத், அஹ்மத்,
இப்னு மாஜா- 1897,

மேற்கூறிய நபிமொழிகள் மூலம் நபி(ﷺ) அவர்களை எல்லைமீறிப் புகழலாகாது என்பதை அறிய முடிகின்றது. மவ்லித் கிரந்தத்தில் நபி(ﷺ) அவர்களை இஸ்லாம் தடுக்கும் விதத்திலேயே புகழப்பட்டுள்ளது என்பதை இதன் இறுதிப் பகுதியில் நாம் அடையாளம் காணவிருக்கிறோம்.

## ஸலவாத்துக் கூறல் குற்றமா?

மவ்லித் ஓதுவோர் ஸலவாத்துத்தானே கூறுகின்றோம். அது கூட ஆகாதா? என்று தமது செயலை நியாயப்படுத்த முனைகின்றனர். ஆலிம்கள் சிலரும் இதற் கேற்றாற்போல் "மவ்லித்" ஓதுவதற்குரிய ஆதாரங்களைச் சமர்ப்பிக்க முடியாமல் ஸலவாத்தின் சிறப்புக்களைக் கூறி "மவ்லித்" ஓதக் கூடாது எனக் கூறுவோர் ஸலவாத்தை மறுக்கின்றனர் எனப் பிரசாரம் செய்து, மக்கள் உள்ளத்தில் வெறுப்பையேற்படுத்தி வருகின்றனர்.

"ஸலவாத்"தை மறுப்பவன் நிச்சயம் ஒரு முஸ்லிமாக இருக்க முடியாது. முஸ்லிமைப் பொறுத்தளவில் ஒரு நாளைக்குக் குறைந்தது ஐந்து விடுத்தமேனும் ஸலவாத்தைக் கூறியே ஆகவேண்டும். ஐந்து நேரத் தொழுகையின் இறுதி இருப்பு, சுன்னதான தொழுகைகள், அதானின் பின்னர், நபி(ﷺ) அவர்களது திருநாமத்தைக் கேட்கும் வேளைகள் என்று ஒரு



நாளைக்குப் பலவிடுத்தம் ஒரு முஸ்லிம் ஸலவாத்துக் கூறிவிடுகின்றான்.

ஸலவாத்துக் கூறுவதற்கு மாதம், நேரம் குறித்து கூட்டம் கூடவேண்டியதில்லை. முடிந்தமட்டும் ஒருவன் நபி(ﷺ) அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்வதே சிறப்பாகும்.

"ஸலவாத்" என்ற பெயரில் மவ்லித் கிரந்தத்தில் நபி(ﷺ) அவர்கள் பல இடங்களில் கிண்டல் செய்யப்படுகிறார்கள். அவமதிக்கப்படுகிறார்கள். மவ்லித் பக்தர்கள் மவ்லிதை எதிர்ப்போரை ஸலவாத்துக் கூறாதோர் எனத் துர்ப் பிரசாரம் செய்வதால் மவ்லிதின் ஸலாம், ஸலவாத் என்பவற்றின் லட்சணத்தைக் கொஞ்சம் கூறிவிடுவது நல்லதெனக் கருதுகின்றேன்.

**அஸ்ஸலாமு அலைக்க அஹ்மத் யா முஹம்மத்**
**அஸ்ஸலாமு அலைக்க தாஹா யா முஹம்மத்**
**அஸ்ஸலாமு அலைக்க அஹ்மத் யா ஹபீப்.**

என்று ஒரு பைத்தில் நபி(ﷺ) அவர்களை விழித்து நாற்பதிற்கும் மேற்பட்ட விடுத்தம் ஸலாம் கூறப்படுகின்றது. "ஸலவாத்" என்பது "துஆ"வாக இருப்பதால் அதை மடக்கி மடக்கிக் கூறுவதில் அர்த்தமுண்டு. ஸலாம் என்பது அப்படியல்ல; ஒரு நபரைப் பார்த்து பலவிடுத்தம் ஸலாம் கூறினால் ஸலாம் சொல்லப்படும் அந்நபரைக் கிண்டல் செய்வதாகவே அது அமையும். அவ்விதத்திலேயே இந்த ஸலாம் கூறும் பைத் (பாடலு)ம் அமைந்துள்ளது.

இதேவேளை, நபி(ﷺ) அவர்களை கண்ணிய மில்லாமல் முஹம்மத்! முஹம்மதே! என்றெல்லாம் விழித்து ஸலாம் கூறப்படுகின்றது. நபி(ﷺ) அவர்களது

அறைகளுக்குப் பின்னால் நின்று கொண்டு முஹம்மதே! எனச் சில காட்டறபிகள் அழைத்ததை அல்லாஹ் அல்குர்ஆனில் கண்டித்து அவர்களை அறிவில் லாதவர்கள் என்கிறான்.

“**நிச்சயமாக எவர்கள் (உமது) அறைகளுக்குப் பின்னாலிருந்து உம்மை அழைக்கின்றார்களோ அவர்களில் அதிகமானோர் விளங்கிக் கொள்ளமாட்டார்கள்.**” (49:4)

அந்த விதத்தில் அமைந்துள்ள முஹம்மதே உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டும், அஹ்மதே உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டும் என்று கூறுவதும் கண்டனத்திற்குரியதும் நபி(ﷺ) அவர்களை இழிவுபடுத்துவதுமாகும்.

ஸலவாத்தைக் காரணம் காட்டி மவ்லிதை நியாயப் படுத்துவது அர்த்தமற்றதாகும். ஸலவாத்தைப் பொருத்தவரை ஒரு முஸ்லிம் சில வேளைகளில் கட்டாயம் செய்தேயாக வேண்டும். சில நேரங்களில் செய்வது சிறப்பானதும் உயர்வானதுமாகும். ஸலவாத் என்ற ஷரீஅத்தின் அங்கீகாரம் பெற்ற இபாதத்திற்கும் ஷரீஅத்தின் அங்கீகாரமற்ற மவ்லித் என்ற பைத்துக்குமிடையில் முடிச்சுப் போடுதல் மடமையாகும். ஸஹாபாக்களில் எவரும் ஸலவாத்துக் கூற நாள், திகதி குறித்து கூட்டம் கூடி, தாளமிட்டு, ராகமிட்டுப் பாட்டுப் பாடியதாக வரலாறு இருப்பதாக அறிய முடியவில்லை.

## கவிதை என்பது காரணமல்ல:

சில உலமாக்கள் மவ்லித் ஓதுவது கூடாது என்றதும் ஹஸ்ஸான் பின் தாபித் போன்ற கவிஞர்களை நபி(ﷺ) அவர்கள் கௌரவித்திருப்பதை ஆதாரம் காட்டி மவ்லிதை நியாயப்படுத்த முற்படுகின்றனர்.



கவிதைகளைப் பொருத்தளவில் இஸ்லாத்தின் அடிப்படை விதிகளை மீறாத, அர்த்தமுள்ள கவிதைகளுக்கு மார்க்கம் அனுமதியளிக்கின்றது. இஸ்லாத்தின் அடிப்படைகளுக்கு வேட்டு வைக்கின்ற, உண்மைகளை மூடி மறைத்துவிட்டு பொய்மையில் வடித்தெடுக்கப்படும் கவிதைகளை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கின்றது.

“ஷைத்தான்கள் யார் மீது இறங்குகின்றனர் என உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?”

“இட்டுக்கட்டும் ஒவ்வொரு பாவியின் மீதும் இறங்குகின்றனர்.”

“(ஒட்டுக்) கேட்டவற்றை (இவர்களின் காதுகளில்) போடுகின்றனர். அவர்களில் அதிகமானோர் பொய்யர்களே!”

“இன்னும் கவிஞர்களை வழிகேடர்களே பின்பற்றுவார்கள்.”

“அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை நீர் பார்க்க வில்லையா?”

“நிச்சயமாக அவர்கள் தாம் செய்யாத தைக் கூறுகின்றனர்.”

“யார் நம்பிக்கை கொண்டு, நல்லறங்களும் புரிந்து, அல்லாஹ்வையும் அதிகம் நினைவு கூர்ந்து, தாம் அநீதி செய்யப்பட்ட பின் வெற்றி பெற்றார்களோ அவர்களைத் தவிர. அநியாயம் செய்தோர் தாம் செல்லும் இடம் எது என்பதை விரைவில் அறிந்து கொள்வார்கள்.”

(26:221-227)

**“பள்ளியில் பழிக்குப் பழி கொலை செய்வதையும், அங்கு கவிதைகள் பாடுவதையும், அல்லாஹ்வின் தண்டனையை நிறைவேற்றுவதையும் நபி(ﷺ) அவர்கள் தடை செய்தார்கள்.”**

(நூல்: ஆபூதாவுத்- 4490, அஹ்மத்- 6675)

**“உங்களில் ஒருவருடைய உள்ளம் கவிதையால் நிறைந்திருப்பதை விட சீழினால் நிறைந்திருப்பது சிறந்ததாகும்.”**

அறிவிப்பவர்: அபூஸயீது (ரழி)
நூல்: புஹாரி- 6154, முஸ்லிம், அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா

இவ்விறை வசனங்கள், நபிமொழிகள் மூலம் பொய் பாடும் புலவர்கள் மீது ஷைத்தான் இறங்குகிறான் என்பதும் இஸ்லாத்தின் போதனைகளுக்கு முரணான கவிதைகளைப் பள்ளியில் பாடுதல் தடைசெய்யப்பட்டது என்பதையும் இத்தகைய கவிதைகளுக்கு உள்ளத்தில் இடம் கொடுப்பது கூட குற்றமாகும் என்பதையும் அறிய முடிகின்றது.

குர்ஆன், ஹதீஸ் ஆகியவை போலிக் கவிதைகளைக் கண்டிக்கின்றன. கண்டனத்திற்குரிய கவிகளில் முதல் வரிசையில்தான் மவ்லித் இருந்தாலும் கூட நாம் போலிக் கவிதை என்பதைக் காரணம் காட்டி மவ்லிதைக் கூடாது எனக் கூறவில்லை. மவ்லிதை நாம் கூடாது எனக் கூறுவதற்கு அது நபி(ﷺ) அவர்கள் காட்டித்தராத புதுவழி என்பதே அடிப்படைக் காரணமாகும்.

எனவே, மவ்லிதை நியாயப்படுத்துவோர் முதலில் இதற்கான ஷரீஅத்தின் அங்கீகாரத்தை, நபிகளாரின் முன்மாதிரியைக் காட்டக் கடமைப்பட்டுள்ளனர்.



கவிதை இஸ்லாத்தில் அனுமதிக்கப் பட்டிருந்தாலும் அது இபாதத் ஆகாது என்பதை நாம் குறிப்பிடக் கடமைப்பட்டுள்ளோம். நபி(ﷺ) அவர்களால் பாராட்டப்பட்ட, நபி(ﷺ) அவர்களின் நேரடி அங்கீகாரம் பெற்ற ஹஸ்ஸான் பின் தாபித் போன்ற ஸஹாபாக்களின் கவிதைகளைக் கூட எந்த ஸஹாபியும் நபி(ﷺ) அவர்களது பிறந்த தினத்தில் வணக்கமாகக் கருதிப் பாடியதற்கான ஆதாரம் ஒன்றைக் காணமுடியவில்லை.

ஏனைய ஸஹாபாக்களைத்தான் விடுவோம். ஹஸ்ஸான்(ரழி) அவர்கள் கூட நபி(ﷺ) அவர்களது பிறந்த தினத்தில் கவிதை பாடி நன்மையைப்பெற முயற்சிக்கவில்லையே. ஏன்? அவர்களுக்கு நபி மேல் மதிப்பும் பற்றும் இல்லை எனக் கூறப்போகிறீர்களா? ஹஸ்ஸான் போன்ற நபி(ﷺ) அவர்களின் காலக் கவிஞர்களின் கவிகள் இன்றும்தான் இருக்கின்றன. அவைகளைக் கூட எவரும் “இபாதத்”தாக ஓதியதுண்டா?

நல்ல கவிகளுக்கு இஸ்லாம் கொடுத்திருக்கும் அனுமதியை, மவ்லிதை நியாயப்படுத்த ஆதாரமாகக் கொள்ள முடியாது. மவ்லிதில் உள்ள கவிகள் ஆகுமானவையாக இருந்தால் கூட, இபாதத்தாக எண்ணிப் பாடப்பட்டால் அது “பித்அத்” என்ற வகையில் கண்டனத் திற்குரியதாகிவிடும் என்பதை நினைவில் கொள்க.

## இது நல்லமல் தானே:

“மவ்லித் களரி”யில் இருக்கும் சில வெளிப்பூச்சுக்களைக் காண்கின்ற பாமர மக்கள், நபி(ﷺ) அவர்கள் இதைச் செய்யாவிட்டால் கூட இது நல்லதாகத்தானே தென்படுகிறது, இது எப்படி தீங்காக

முடியும்? எனச் சிந்திக்கின்றனர். இதே வேளை உலமாக்கள் பலரும் கூட மவ்லித் ஓதினால், அந்த இடத்திற்கு வருகை தந்தால், அந்த மஜ்லிஸை சங்கைப் படுத்தினால், அங்கு வந்திருக்கும் உலமாக்களுக்குக் காணிக்கையைக் கையில் திணித்தால் பெரும் "அவ்லியா"வாகிவிடுவதாக, சுவனத்தில் நபி(ﷺ) அவர்களோடு இருக்கும் பாக்கியம் கிடைப்பதாகக் கதை அளந்து கொண்டிருக்கின்றனர். பல அறிஞர்களும் மவ்லிதின் சிறப்புப் பற்றி பல சங்கதிகளைச் சொல்லி வைத்திருப்பதாக பல்வேறு பொய்களும் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளன. இதனால் பாமர மக்களின் மனதில் ஒரு நல்லமல் என்கின்ற எண்ணம் அடிமனதில் ஆழப்பதிந்துள்ளது.

நபி(ﷺ) அவர்கள் காட்டித் தராத ஒரு செயல் மூலம் அல்லாஹ்வின் திருப்தியையும் சுவனத்தையும் பெற முடியும் என ஒரு முஸ்லிம் எப்படி நம்ப முடியும்? இந்த நம்பிக்கையின் அர்த்தம் தான் என்ன? எல்லா நல்லமல்களையும் நபி(ﷺ) அவர்கள் காட்டித்தரவில்லை. மவ்லித் போன்ற சில நல்லமல்களைக் காட்டித் தராமல் சென்றுவிட்டார்களே என்று கூறுவதாக அமையாதா?

இஸ்லாம் பூர்த்தியான மார்க்கம் அன்று. அதில் இன்னும் சேர்க்கப்பட வேண்டிய இபாதத்துக்களும் இருக்கின்றன என்றாகி விடாதா?

**"நான் இன்றைய தினம் உங்களுக்கு உங்கள் மார்க்கத்தைப் பரிபூரணப்படுத்தி விட்டேன்"** (5:3)

என்ற அருள்மறையின் கூற்று அர்த்தமற்றதாகி விடாதா?



நபி(ﷺ) அவர்கள் ஒன்றைச் சொல்வதென்றால் அல்லாஹ்வின் அனுமதி வேண்டும். மவ்லித் பற்றி நபி(ﷺ) அவர்கள் எதுவும் கூறவில்லையென்றால், அது பற்றிய கட்டளை எதனையும் அல்லாஹ் வஹி மூலம் அறிவிக்கவில்லை என்றுதான் அர்த்தமாகின்றது. எனவே, அல்லாஹ் கூட சில நல்லமல்களைச் சொல்லித் தராமல் விட்டு விட்டானா? அல்லது அல்லாஹ் மறந்துவிட்டான் எனக் கூறப் போகிறார்களா? (நஊதுபில்லாஹ்)

அல்லாஹ்வும் ஏவாத, நபி(ﷺ) அவர்களும் அறிமுகப்படுத்தாத, ஸஹாபாக்கள் எவரும் செயல் படுத்தாத பிறந்த தின விழாவால் சுவனம் செல்ல முடியும் எனின், அல்லாஹ்வைத் தவிர ஷரீஅத் விதிமுறைகளை வகுத்துத் தரும் வேறு தெய்வங்கள் இருப்பதாக நம்புவதாகாதா? இந்த நம்பிக்கை "ஷிர்க்"கின் பக்கம் இட்டுச் செல்லாதா?

**"அல்லாஹ் அனுமதிக்காததை அவர்களுக்கு மார்க்கமாக ஆக்கக்கூடிய இணை தெய்வங்கள் அவர்களுக்கு இருக்கின்ற னவா? தீர்ப்புக்குரிய விதி இல்லாவிட்டால் அவர்களுக்கிடையில் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். நிச்சயமாக அநியாயக்காரர்களுக்கு நோவினை தரும் வேதனை உண்டு."** (42:21)

ஸஹாபாக்கள் எவரும் நபி(ﷺ) அவர்களது பிறந்த தினத்தை முன்னிட்டு மக்களை ஒன்று கூட்டி, கவிதை பாடி, விருந்து கொடுத்து, இவ்விதம் செய்வதால் சுவனம் செல்லலாம் எனக் கூறியதாக ஒரு ஆதாரத்தைக் கூடக் காண முடியாதுள்ளதே?

ஸஹாபாக்களை விட அறிவில் முதிர்ச்சி அடைந்தவர்கள் எவரும் எம்மில் உள்ளனரோ? அவர்களை விட நன்மை செய்வதில் நாம் ஆர்வம் கொண்டு

விட்டோமா? மவ்லித் ஓதி கூலி வாங்கும் ஆலிம்கள், ஸஹாபாக்களை விட உயர்ந்து விட்டனரோ? அவர்களை விட இவர்களுக்கு அண்ணலாரின் மீது அன்புப் பெருக்கம் ஏற்பட்டுவிட்டதோ?

இந்த மவ்லித் இஸ்லாத்தில் ஏவப்படாதது. ஏவப்படாததைச் செய்வதால் எந்தப் பயனும் இல்லையெனப் பல நபிமொழிகள் கூறிக் கொண்டிருக்கின்றன. மார்க்கத்தில் ஏவப்படாததைச் செய்வோருடன் போர் தொடுக்குமாறு நபி(ﷺ) அவர்கள் ஏவி இருக்கிறார்கள். அவற்றையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு எப்படி இந்த மவ்லிதிற்கு நீங்கள் வக்காலத்து வாங்குவீர்கள்? போராடித் தடுக்கவேண்டிய கூட்டத்திற்குப் பணம் கொடுத்து, பொருள் கொடுத்து எப்படி உதவ முன்வருவீர்கள்? நீங்கள் ஆதரிக்கும் மவ்லித் எவ்வளவு ஆபத்தானது என்பதை அறிய முனைந்தீர்களா? இதோ.....

## பொய் பிறந்தது புலவன் வாயிலே:

கவிதையென்றாலே இன்று பொய்யும் கற்பனையுமென்றாகிவிட்டது. “கண்ணுக்கு மை அழகு; கவிதைக்குப் பொய் அழகு” என்பர். இதற்குச் சிறந்ததொரு எடுத்துக்காட்டாக நாம் மவ்லிதையே கொள்ளலாம்.

**அன்தல்லதீ சும்மீத பில் குர்ஆனி அஹ்மத்**
**வமக்தூபன் அலல் ஜீனானி**

“<u>உங்களுக்குத்தான் குர்ஆனில் அஹ்மத் எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. அது சுவர்க்கத்திலும் பதியப்பட்டுள்ளது.</u>”

இவ்வாறு அப்துல் முத்தலிப் நபி(ﷺ) அவர்கள்



பிறந்த போது கவிபாடினார் என “மவ்லித்” நூலாசிரியர் கதைவிடுகின்றார். நபி(ﷺ) அவர்களது நாற்பதாவது வயதில்தான் அல்குர்ஆனே அருளப்பட்டது. நபி(ﷺ) அவர்கள் பிறந்த வேளையில் அப்துல் முத்தலிப் உங்களுக்குத்தான் குர்ஆனில் அஹ்மத் எனப் பெயர் சூட்டப்பட்டது. சுவனத்திலும் அது பதியப்பட்டள்ளது என்று எப்படிப் பாட முடியும்? ஆச்சரியமாயில்லையா? தானாக ஒரு கவிதை இயற்றிவிட்டு அதை அப்துல் முத்தலிபின் பெயரில் அரங்கேற்றிய இப்புலவருக்குப் பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லத் தெரியவில்லை போலும்.

சுப்ஹான மவ்லிதில் மாத்திரம்தான் பொய் நிறைந்துள்ளது என எண்ணி விடாதீர்கள். எல்லா மவ்லித்களின் லட்சணமும் இதுதான். உதாரணத்திற்காக முஹியத்தீன் மவ்லூதின் கவி? வரிகள் சில இதோ.

**லிதீகி குல்லில் அவ்லியா உசுகூது**
**வலய்ச யஸ்குது தீகுகல் குனூது**
**லியவ்மின் பஅதல்லாஹு மய்யமூது**

எல்லா அவ்லியாக்களின் சேவலும் கூவும் (பின்) நிறுத்திவிடும். ஆனால், (அப்துல் காதர் ஜீலானி(ரஹ்) ஆகிய) உங்களது சேவல் மட்டும் கூவுவதை நிறுத்தாது. மரணித்தவர்களை எழுப்பும் நாள் வரை அது கூவிக் கொண்டே இருக்கும். (கின்னஸ் புத்தகத்தில் பதியப்பட வேண்டிய எட்டாவது உலக அதிசயம் இது.) அப்துல் காதர் ஜீலானியின் சேவல் மறுமை நாள் வரைக்கும் கூவிக் கொண்டே இருக்கும் என்று எவ்வளவு துணிச்சலாக இந்தப் புலவர் கவிதை புனைந்துள்ளார் என்று பாருங்கள். எதைச் சொன்னாலும் நம்ப ஒரு கூட்டம் இருக்கின்றது என்ற ஆணவம்தானே இது!

வாய்க்கு வந்ததெல்லாம் கவிதை என்ற பெயரில் உளறிக் கொட்டப்பட்டுள்ளது என்பது புரிகிறதல்லவா? இந்தப் பொய்களுக்காகத்தான் மேளம் தட்டியும், வாசனைத் திரவியங்கள் தெளித்தும், இனிய ராகத்தோடு ஓதலும் நடக்கிறதோ? பொய் பாடத்தான் நேரத்தையும் பணத்தையும் செலவழித்தீர்களா? இப்படிப் பாடுவதால் நன்மை ஏதும் கிடைத்துவிட முடியுமா? பொய்க்கு இஸ்லாத்தில் அனுமதி உண்டா என்பதைச் சிந்தித்து மவ்லித் ஓதுவது ஆகுமா? ஆகாதா? என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்.

## உலகாயுத நோக்கம்:

நாம் எதைச் செய்தாலும் “இஹ்லாஸ்” என்ற தூய எண்ணத்துடன் உலகாயுத நோக்கமின்றியே செய்ய வேண்டும் என்பதே இஸ்லாத்தின் போதனையாகும். இந்த முகவரி இல்லாத கவிஞனிடமும் அதைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு குதியாய்க் குதிக்கும் மவ்லித் பக்தர்களிடமும் இந்த தூய எண்ணம் இருக்கின்றதா என்றால் இல்லை என்ற பதிலையே மவ்லித் தருகிறது. இதோ மவ்லிதின் முகவுரை அதை இயற்றியவரின் எண்ணத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

“ஹாபிழிப்னுதிஹ்யா” என்பவர் ஒரு மவ்லூதைக் கோர்வை செய்து அதற்கு, “அத்தன்வீர் ∴பீமவ்லீதில் பஷீரின் நதீர்” என்று பெயர் சூட்டினார். இந்த மவ்லூதை மன்னர் முழப்பர் அபூ ஸயீத் என்பவர் 1000 தங்கக் காசு கொடுத்து, மரியாதை செய்து, வருடந்தோறும் அவர் மவ்லூது ஓதுகிறவராயும் அதற்காக அநேக திரவியங்கள் செலவு செய்து விருந்து அளிக்கிறவராயுமிருந்தார்.



| | |
|---|---|
| சுடப்பட்ட ஆட்டுத்தலை ஐயாயிரம் | 5000 |
| கோழி பத்தாயிரம் | 10000 |
| இறைச்சியின் தட்டம் ஒரு இலட்சம் | 100000 |
| ஹல்வாவின் தட்டம் முப்பதாயிரம் | 30000 |
| சோற்று சஹன் முப்பதாயிரம் | 30000 |

அவருடைய மவ்லூதின் விருந்துக்கு வந்தவர் களில் ஒருவர் கூறுவது பின்வருமாறு.

**(விருந்துதான் அவர் குறிக்கோள். அது பற்றித்தான் கதையளக்கவும் படுகிறது. நபி மீது அன்பு கொண்ட சுல்தான், நபி அவர்களை அனு அனுவாகப் பின்பற்றினார். என்றெல்லாம் கூறப்படவில்லை.)**

<u>ஆதலால், ஒரு மவ்லூதுக்கு மூன்று இலட்சம் செலவு செய்கிறவராயும்</u> (நீங்களும் கடன்பட்டாயினும் மௌலிதைச் சிறப்பாக்க வேண்டும். அது மட்டும் போதாது ஓதியவர்களைக் கவனிக்க வேண்டாமா? அதற்கொரு லிஸ்ட்)

<u>அந்த மவ்லிது மஜ்லிசுக்கு விஜயம் தரும் உலமாக்களுக்கும் சூபியாக்களுக்கும் உயர்தரமான ஆடை வஸ்திரங்களை சன்மானமாகக் கொடுத்து மிகுந்த மரியாதை செய்கின்றவராயுமிருந்தார்.</u>

இவ்வாறு சுப்ஹான மவ்லிதின் பிரத்தியேக சிறப்புரையிலேயே தன் உலகாதாய நோக்கத்தை வெளியிட்டுள்ளார். கவிதைகளில் கூட ஆங்காங்கே பல இடங்களில் கோப்பி, ஹல்வா, சோறு, பிரியாணி என தமது உள்ளக் கிடக்கைகளைக் கொட்டித் தீர்த்துள்ளார்.

முஹியித்தீன் மவ்லிதின் 4, 6 தவிர்ந்த ஏனைய

எல்லா பைத்துக்களின் இறுதியிலும் சாப்பாட்டைப் பற்றிய பிரஸ்தாபத்தைக் காணலாம். ஷாஹுல் ஹமீத் மவ்லிதைக் குறை கூற முடியாது என்கிற அளவிற்கு அங்கும் "தின்னிப் புத்தி" வெட்ட வெளிச்சமாக்கப்பட்டுள்ளது.

பிரியாணி போட்டவர்களுக்கு ஷாஹுல் ஹமீத் மவ்லூதின் முதல் பைத்தின் இறுதி 4 வரிகளில் துஆச் செய்யப்படுகின்றது.

இவ்வாறே கொழுத்த (பிராணிகளை அறுத்து) குர்பானிக் கறிச் சோறு போட்டவர்களுக்கு மூன்றாம் பைத்தின் இறுதியில் துஆ.

காப்பி கொடுத்தவர்களுக்கு எட்டாம் பைத் ஐஸ் வைக்கிறது. சாப்பிடுங்கள், சாப்பிடுங்கள் என உபசரிப்பவர்களுக்கு ஆறாம் பைத்தில் துஆச் செய்யப் படுகின்றது. (துஆ செய்யப்படுகிறதென்றால் நீங்கள் இப்படித்தான் உபசரிக்க வேண்டும் என்று சொல்லாமல் சொல்லப்படுகின்றது என்பதைப் புரிந்து கொண்டால் சரி.)

இவையெல்லாம் மவ்லித் உலகாயுத நோக்கத்திற் காக உருவாக்கப்பட்டு அதற்காகவே நடத்தப்படுகின்றது என்பதைத் தெளிவுபடுத்தப் போதுமானவையாகும்.

மவ்லித் ஓத வருகின்ற தீன்தாரிகளுக்கு உபசரிப்புக்களையும் காணிக்கைகளையும் நிறுத்திவிட்டு சும்மா மவ்லித் ஓத அழைத்துப் பாருங்களேன். அப்போதுதான் இவர்களது நபியைப் புகழ வேண்டும் என்ற உணர்வு, ஆர்வம், ஆதங்கம், நபி நேசம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் தொலைந்து போய்விடுவதைக் காண்பீர்கள்.



உலகாயுத நோக்கத்திற்காக உருவாக்கப்பட்டு, அதற்காகவே செயல் படுத்தப்பட்டு வருகின்ற இந்த மவ்லூதின் வளர்ச்சிக்கு உதவுவதை இஸ்லாம் அனுமதிக்குமா?

## அமல்களில் ஈடுபாட்டைக் குறைக்கிறது:

இந்த மவ்லித் பழக்கம் முஸ்லிம்கள் மத்தியில் ஊறிப் போனதால் மக்கள் இபாதத்துக்களை விட்டு ஒதுங்கி இருப்பதைக் காணலாம்.

குர்ஆனை ஓத வேண்டிய முஸ்லிம்கள் இந்த மவ்லிதினால் குர்ஆனை விட்டு ஒதுங்கியிருக்கின்றனர். ஏதாவது ஒரு வீட்டில் குர்ஆன் ஓதப்பட்டாலும் அது துக்க காரியங்களுக்காக எக்ஸ்பிரஸ் வேகத்தில ஓத(முணங்க)ப் படுகின்றது. ஆனால், மவ்லித் ஓதுவதென்றால் நீட்டி நிதானித்து ராகமிட்டு ஓதுவதைக் காணலாம்.

பல முஸ்லிம்கள் மவ்லிதையும் குர்ஆன் என்றே எண்ணியுள்ளனர். குர்ஆனுக்கில்லாத மதிப்பு மவ்லிதுக்கும் அது ஓதப்படும் மஜ்லிசுக்கும் அளிக்கப்படுகின்றது. குர்ஆனிலிருந்து முஸ்லிம்களைத் திசை திருப்பவென்றே அந்நியர்களால் திட்டமிட்டு நுழைக்கப்பட்டதுதானோ இந்த மவ்லித்? இல்லாவிட்டால் ஏன் மவ்லித் எழுதிய புண்ணியவான் தன் பெயரைக் குறிப்பிடாமல் மொட்டையாக எழுத வேண்டும்?

பர்ளான தொழுகைகளைக் கூட கடைப்பிடிக்காமல் மவ்லூதினை ஓதுவதன் மூலம் சுவனத்தை அடைந்து கொள்ளலாம் என்ற நச்சுக் கருத்தை விதைக்க இஸ்லாத்தின் எதிரிகள் மேற்கொள்ளும் சதியாகும். பலர்

மவ்லித் ஓதுவதில் மாத்திரம் கண்ணும் கருத்துமாயிருப்பர். ஓதுகின்ற ஆலிம்(?)கள் கூட ஓதிக் கொண்டிருக்கும் போது அதான் கூறினால் கூட மவ்லூதை நிறுத்தி, செவிமடுத்து அதற்குரிய கடமைகளை நிறைவேற்றமாட்டர். அத்துடன் தொழச் செல்லாமல் ஓதி முடித்து விட்டே செல்வர். இப்போக்கு திட்டமிட்டே மேற்கொள்ளப்பட்ட சதிக்குக் கிடைத்த வெற்றியோ என எண்ணத் தோன்றுகின்றது. மௌலூதில் திட்டமிட்டே பல இடங்களில் விஷக் கருத்துக்கள் தூவப்பட்டுள்ளன. இதோ சில உதாரணங்கள்.

"அமீருல் மு.ஃமினீன் ஹாரூன் ரஷீதுடைய காலத்தில் பஸராவில் ஒரு வாலிபன் கடுமையான பாவம் செய்பவனாயிருந்தான். அங்குள்ளோர் அவன் செய்யும் பாவங்களுக்காக அவனை வெறுத்தொதுக்கினர். எனினும், அவ்வாலிபன் ரபீஉல் அவ்வல் மாதம் வந்தால் குளித்து, தூய ஆடை அணிந்து, வாசனை பூசி அலங்கரித்து நபி(ﷺ) அவர்களின் மவ்லிதை ஓதி விருந்தும் கொடுப்பான். (வெறுத்து ஒதுங்கியவர்கள் விருந்துக்கு மட்டும் போவார்களாக்கும்.)

இவ்வாறு வருடந்தோறும் சதா நடத்தி வந்தான். அவன் மரணமான பின் அவன் மௌத்திற்காக எவரும் வரவில்லை. (ஏன் வரவேண்டும்? மரண வீட்டில் விருந்தா கொடுக்கின்றனர்?) அப்போது உருவமில்லாத நிலையில் ஒரு சப்தம் கேட்டது. ஓ பஸரா வாசிகளே! இந்த இறை நேசரின் மையித்துக்காக ஆஜராகுங்கள். இவர் என்னிடம் மேன்மையுடையவராயிருக்கிறார் என்பதே அந்த சப்தம்.

உடனே அவ்வூர்வாசிகள் அங்கு சென்று அவரைத் தொழவைத்து அடக்கம் செய்தார்கள். பிறகு அவ்வாலிபரை சுவர்க்கத்தில் சுன்துஸி, இஸ்தப்ரக் எனும் பட்டாடையில்



பிரகாசிப்பவராகக் கனவில் காட்டப்பட்டு, உமக்கு இவ்விதமான சிறப்பு எவ்வாறு கிடைத்தது என்று கேட்டதற்கு அவ்வாலிபர் நபி(ﷺ) அவர்களின் மௌலூதை நான் ஓதிவந்ததால்தான் கிடைத்தது என்றார். (ஊர்வாசிகள் எல்லோரும் ஒரேவிதமாகவே கனவு கண்டுள்ளனர்!) இக்கதை மவ்லிதின் முன்னுரையிலே கூறப்படுகின்றது. இஆனதுத் தாலிபீனிலும் இக்கதையைக் காணலாம்.

கடுமையான பாவம் செய்பவனாக நீ இருந்தாலும் மவ்லித் ஓதி சுவனம் செல்லலாம், அவ்லியா ஆகலாம் என்ற நச்சுக் கருத்து இங்கே விதைக்கப்படுகின்றது.

இது போன்றே அநேக வலிமார்களுடைய மவ்லிதுகளை ஓதி வருவதிலும் அனந்தங் கோடி மக்கள் பலாபலன் பெற்ற ஹிகாயத் (சம்பவங்)கள் அநேகம் உள்ளன. அவைகளில் ஒன்று பின்வருமாறு.

அல்லாமதுத்தஹ்ர் ஷைகுல் கபீர் மியான் அஹமலுல்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். புர்ஹான்பூர் பட்டினத்தில் என் வீட்டுக்கடுத்த வீட்டில் பெரும் செல்வந்தர் நெருப்பு வணங்குகின்ற (மஜூஸி) ஒருவர் இருந்தார். அவர் நமது நாயகம் குத்புர் ரப்பானீ, கௌதுஸ் ஸமதானி செய்யதினா முகைதீன் அப்துல் காதிர் ஜெய்லானீ(ரஹ்) அவர்கள் பேரில் அதிகமான பிரியம் வைத்திருந்தார். தமது சுய மதத்தை வெறுத்தவராயும் முகைதீன் அப்துல் காதிர் ஜெய்லானீ(ரஹ்) அவர்கள் பக்கம் தாம் சேர்ந்துள்ள முரீது என்று பேசுகிறவராயும் இருந்தார். (இஸ்லாத்தில் இருக்கிறாரோ இல்லையோ முகைதீன் அப்துல் காதிர்(ரஹ்) அவர்களது முரீதாக இருக்கிறாரே அதே போதும் சுவனத்திற்கு இவர் போனார் என்று கதை கட்ட.)

இன்னும் அவர் ரபீஉல் ஆகிர் மாதம் 11 ஆம் திகதி அன்று வழமையாய் மிக நேர்த்தியான உயர்ந்த உணவுகள், பழவர்க்கங்கள், மதுரமான குடிப்புகள் (கவனிக்கவும் சாப்பாட்டு அய்டங்கள்தான் மெயின்) முதலானவற்றைத் தயார் செய்து வைத்துத் தன் வீட்டை சந்தனம், அத்தர் முதலிய வாசனைகளைக் கொண்டு அலங்கரித்து உலமாக்கள், மஸாயிகுகள் முதலியவர்களைக் கொண்டு முகையத்தின் அப்துல் காதிர் ஜெய்லானீ(ரஹ்) அவர்கள் பேரில் மவ்லிதை ஓதி பாதிஹா ஓதிய பின் யாவரும் புகழத்தக்க உணவும் கொடுத்து மஜ்லிசைச் சிறப்புச் செய்கிறவராயிருந்தார். (எவன் மனைவி எவனோடு போனால் என்ன, லெப்பைக்கு நாலு பணம் கிடைத்தால் போதும் என நாட்டுப் புறத்தில் கூறப்படும் மொழி வழக்கை மெய்ப்பிக்கத் தக்க சான்று. சாப்பாடு கிடைத்தால் மஜூசி வீட்டிலும் பாத்திஹா ஓத உலமாக்கள்(?) மஸாயிகுகள்(?) தயார். அவ்லியா பக்தியா(?), சாப்பாட்டு பக்தியா? அல்லாஹ்வுக்குத் தான் வெளிச்சம்!)

அப்பால் அவர் இறந்துவிட்டார். அவருடைய இனத்தவரின் வழக்கம் போல் சுடுகாட்டிற்கு எரிப்பதற்காகக் கொண்டு போய் அதிக விறகுகளைக் கொண்டு அவரைக் கொளுத்தியதில் அல்லாஹ்வுடைய சக்தியால் அவருடைய உரோமத்தில் ஒரு உரோமத்தை யேனும் நெருப்புக் கரிக்கவில்லை. (இப்றாஹீம்(عليه السلام) அவர்களை விட மஜூஸி உயர்த்தப்படுவதை அவதானிக்க லாம்) அப்படி எல்லோரும் அவரது நிலைமையைக் கண்டபோது அவர்கள் எல்லோரும் ஆலோசித்து அவரை ஓடுகின்ற தண்ணீரில் போட்டுவிடுவோம் என்று சொல்லி தண்ணீரில் எறிந்து விட்டார்கள்.



பிறகு அவ்லியாக்களில் ஒருவரின் கனவில் முஹ்யத்தீன் அப்துல் காதிர் ஜெய்லானீ(ரஹ்) அவர்கள் வந்து இந்த நெருப்பு வணங்கி மஜூஸியானவர் எனது வெளிப்படையான முரீதாக இல்லாவிடினும் அந்தரங் கத்தில் எனது முரீதுடைய நிலையை அடைந்தவர். அவ்லியாக்களுக்கு மத்தியில் "ஸயீதுல்லாஹ்" அல்லாஹ்வின் பாக்கியசாலி என்ற பெயருடையயவராக உள்ளார். ஆகையால் அவரை எடுத்து குளிப்பாட்டி, தொழுவித்து நல்லடக்கம் செய்யுங்கள்.

"நிச்சயமாக அல்லாஹ் என்னை நோக்கி உனது முரீதை இம்மையிலும் மறுமையிலும் நெருப்பில் சுடுவதில்லை" என்றும், இம்மையில் அவர்களின் இறுதிக்கட்டத்தை சிறப்புமிக்கதாக ஆக்கிவைப்பதாகவும் எனக்கு வாக்குறுதி தந்திருக்கிறான் என்று கூறினார்கள்.

ஆகவே, எனது உடன் பிறப்புக்களே! ஒரு மஜூஸியான நெருப்பை வணங்கும் காபிரான மனிதர் நமது ஷைகு அப்துல் காதிர் ஜெய்லானி அவர்கள் மீது முஹப்பத் வைத்து அவர்களின் மவ்லூதை ஓதி விருந்து செய்ததால் அவருடைய மர்த்தபா - பதவி இவ்வாறிருக்கு மானால் நமது முஸ்லிமானவர்கள் இவ்வாறு செய்தால் அவர்களுடைய மர்தபா - எவ்வளவு உயரும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இதுவும் மவ்லிதின் முகவுரை கூறும் கதைதான். காபிர் ஒருவன் சுவனம் சென்றான் எனக் கூறும் இக்கதையை ஒரு முஸ்லிம் எழுதியிருப்பான் என நம்புகிறீர்களா? எம்மதமும் சம்மதம் என்ற போக்கை இது உருவாக்காதா? மஜூஸிக்கே மவ்லித் பயனளிக்குமெனின் நாம் இபாதத் செய்யத் தேவையில்லை. செய்ய

வேண்டியதையெல்லாம் செய்துவிட்டு பின்னர் நாலு காசை விட்டெறிந்து மவ்லிதை ஓதிவிட்டால் போகிறது. அல்லாஹ்வின் பாக்கியசாலி என்ற பட்டத்தைப் பெற்று சுவனம் சென்றுவிடலாம் என்ற எண்ணத்தை உருவாக்கும் விதத்தில் இந்தக் கதை அமைந்துள்ளதல்லவா?

மவ்லித் பற்றிய இவர்களது போலிப் புகழாரம் இத்துடன் நின்றுவிடவில்லை. அல்லாஹ் பெயர் சொல்லி சபித்தவனுக்குக் கூட இந்த மவ்லித் பயனளிக்கும் என பொய்க் கதை ஒன்றைச் சொல்லி அதையும் திரித்து மவ்லிதை நியாயப்படுத்துவர். இதோ அந்தக்கதை:

நபி(ﷺ) அவர்கள் பிறந்த போது அபூலஹபிடம் அவரது சகோதரர் அப்துல்லாஹ்விற்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியை அவனது அடிமைப் பெண் வந்து சொன்னாளாம். இந்த சந்தோஷச் செய்தி கேட்ட அபூலஹப் மகிழ்ச்சிப் பெருக்கால் தனது கையால் அப்பெண்ணைச் சுட்டிக்காட்டி நான் உன்னை விடுதலை செய்துவிட்டேன் என்றானாம். அதனால் அவன் நரகத்தில் இருந்தாலும் அவனது வலக்கரத்திலிருந்து பால் ஊறிக் கொண்டிருக்குமாம். அதனை அவன் பருகுவானாம். அதனால் அவனுக்கு மறுமையில் தாகமே ஏற்படாதாம்.

அபூலஹப், நபி பிறப்பால் ஏற்பட்ட மகிழ்வால் அடிமையை விடுதலை செய்ததால் அவனுக்கு இத்தகைய கூலி கிடைக்குமென்றால் நாமும் நபி பிறந்த தினத்தில் எம் மகிழ்ச்சியைக் காட்டக் கூடாதா? என்று வாதாடி மவ்லிதிற்கு வக்காலத்து வாங்குபவர் பலர்.

தவறு செய்வதற்கு தவறிய ஒருவனிடமிருந்தானே முன்மாதிரி பெற வேண்டும்? மவ்லிதை நியாயப்படுத்த அபூபக்கர்(ؓ), உமர்(ؓ) போன்ற ஸஹாபிகளிடம் ஆதாரம்



கிடைக்காததால் அபூலஹபை ஆதாரத்திற்கு அழைத்து வந்து நிறுத்துகின்றனர். ஒரு காபிர் எந்த அமல் செய்தாலும் ஏற்கப்படாது என்பதை அறியாது இவ்வாறு கூறுகின்றனர். அபூலஹப் நபி பிறந்தார் என்பதற்காக மகிழவே இல்லை. அவன் மகிழ்ந்தான் என்றால் அது கூட தன் சகோதரனுக்கு ஆண் குழந்தை கிடைத்ததற்குத்தான் மகிழ்ந்தான் என்பதாகத்தான் இக்கதை கூறப்படுகின்றது என்பதைப் புரியாதவர்களுக்கு வேண்டுமானால் இது பெரிய ஆதாரமாகத் தென்படலாம்.

ஆனால், அல்குர்ஆனில் 111 வது அத்தியாயத்தைத் தெரிந்த எவரும் இந்தப் போலிக்கதையையும் மவ்லிதையும் தூக்கியெறிவே செய்வர்.

**“அபூலஹபின் இரு கைகளும் நாசமாகட்டும்! மேலும் அவனும் நாசமாகட்டும்! அவனது செல்வமோ, அவன் சம்பாதித்தவையோ அவனுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை. தீச்சுவாலையுடைய நரகத்தில் அவனும், விறகு சுமக்கும் அவனது மனைவியும் நுழைவார்கள்.”** (111:1-3)

அல்லாஹ் அழியட்டும் எனச் சபித்த ஒருவனை கைவிரல்களிலிருந்து பாலூறும், நீரூறும் எனக் குர்ஆனோடு போர் தொடுக்கும் கட்டுக்கதையைக் கூறி நியாயப்படுத்தப்படும் மவ்லிதைத் தூக்கியெறிய இன்னும் என்ன தாமதம்?

முஸ்லிம்கள் மத்தியில் காபிர்களும் சுவனம் செல்ல முடியும். நீங்களும் இபாதத் இன்றியே சுவனம் செல்ல குறுக்கு வழியுள்ளது என்ற தீய எண்ணத்தை உருவாக்க செய்யப்பட்ட சதிக்கு நீங்களும் துணைபோகப் போகிறீர்களா?

## குர்ஆனோடு மோதுகிறது :

மவ்லுதின் பொருளடக்கம், கவிகள், அது சொல்லும் கருத்துக்கள் பல விதத்திலும் அல்குர்ஆனோடு போர் தொடுப்பனவாக, அதன் அடிப்படைக் கோட்பாடாகிய தௌஹீதைத் தகர்ப்பனவாக அமைந்துள்ளன. இவ்விடத்தில் விரிவஞ்சி குர்ஆனோடு நேரடியாக மோதுகின்ற, தௌஹீத் கோட்பாட்டிற்கு வேட்டு வைக்கின்ற சில பைத்து (பாடல்)களை மாத்திரம் இனம் காணவுள்ளோம். அதற்கு முன்னர் தௌஹீதுக்கு நேர்மாற்றமான ஷிர்க்கின் தீய விளைவுகள் பற்றி சிறிது விபரித்தல் அவசியமெனக் கருதுகின்றேன்.

## ஷிர்க் ஏற்படுத்தும் விபரீத விளைவுகள்:

**“நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைக்கப்படுவதை மன்னிக்கவேமாட்டான். அது தவிர ஏனையவற்றை, தான் நாடுவோருக்கு அவன் மன்னிப்பான். எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கின்றானோ அவன் நிச்சயமாகப் பெரும் பாவத்தையே இட்டுக் கட்டியவனாவான்.”** (4:48, 116)

மன்னிக்கப்படாத பாவம் என அல்லாஹ் இதை மாத்திரமே கூறுகின்றான். இணைவைக்காமல் மரணிப்பவர் அல்லாஹ்வால் மன்னிக்கப்படலாம், அல்லது அவரது தவறுகளுக்குரிய தண்டனைகளை அனுபவித்த பின்னர் என்றேனும் ஒரு நாள் சுவனம் செல்லலாம், ஆனால் இணைவைத்தவன் எவ்வளவுதான் “அமல்” செய்திருந்தாலும் கூட சுவனம் செல்ல முடியாது. நபிமார்கள் இணைவைத்தால் கூட அவர்களது நல்லமல்கள் எவ்விதப்பிரயோசனமும் அளிக்காது என்பதை அல்குர்ஆன் ஆணித்தரமாக எடுத்துச் சொல்கிறது.



**“(நபியே) ‘நீர் இணை வைத்தாலும் நிச்சயமாக உமது செயல்கள் அழிந்துவிடும். மேலும், நீர் நஷ்டவாளர்களில் ஆகிவிடுவீர்’ என உமக்கும், உமக்கு முன் சென்றோருக்கும் நிச்சயமாக வஹி அறிவிக்கப்பட்டுள்ளது.”** (39:65)

**“இது அல்லாஹ்வின் நேர்வழியாகும். இதன் மூலம் தனது அடியார்களில் தான் நாடுவோரை அவன் நேர்வழியில் செலுத்து கின்றான். அவர்கள் இணைவைத்தால் அவர்கள் செய்து கொண்டிருந்த (நல்ல)வை அவர்களை விட்டும் அழிந்துவிடும்.”** (6:88)

இணைவைத்தவனுக்கு மன்னிப்பும் இல்லை, செய்த நல்லறங்களும் நாசமாகிவிடும். அவன் இறுதி நிலை எவ்வாறு இருக்கும் என்பதை நாமாக யூகித்துக் கொள்ளலாமல்லவா?

**“ ‘நிச்சயமாக மர்யமின் மகன் மஸீஹ்தான் அல்லாஹ்’ எனக் கூறியோர் நிராகரித்துவிட்டனர். ‘இஸ்ராஈலின் சந்ததியினரே! எனது இரட்சகனும் உங்களது இரட்சகனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்’ என்று அல்மஸீஹ் கூறினார். நிச்சயமாக யார் அல்லாஹ்வுக்கு இணைவைக்கின்றானோ அவனுக்கு அல்லாஹ் சுவர்க்கத்தைத் தடுத்து விடுவான். அவனது ஒதுங்குமிடம் நரகமே! அநியாயக்காரர்களுக்கு எந்த உதவியாளர்களும் இல்லை.”** (5:72)

ஒரு மனிதனை நிரந்தரமாக நரகில் தங்கும் நிலைக்காளாக்கக்கூடிய “ஷிர்க்”கை ஏற்படுத்தும் வாசகங்கள் மவ்லிதில் விரவிக் காணப்படுகின்றன. அறியாத பொதுமக்கள் தாம் நன்மை நாடி அதை ஓதிவருகின்றனர். என்றாலும், உலமாக்களும் இது பற்றி அக்கறை இன்றி பாடி வருவதுதான் வேதனைக் குரியதாகும். இணையை எற்படுத்தும் வாசகங்கள் உள்ளன என்பதைத் தெளிவாகத் தெரிந்ததன் பின்னரும்

ஒருவன் அதனை பக்தியோடு ஓதுவானெனின் அவன் ஈமானற்றவனாக, முஸ்லிம் என்ற பெயருக்கு அருகதை அற்றவனாக, இஸ்லாத்தின் வட்டத்தை விட்டும் வெளியேறியவனாகவே இஸ்லாத்தின் பார்வையில் கணிக்கப்படுவான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## பாவங்களை மன்னிப்பவன் யார்?:

**அன்த க∴பாருல் ஹதாயா**
நீங்களே பாவங்களை மன்னிப்பவர்

**வத்தூனூபில் மூபிகாத்**
அழித்தொழிக்கும் (பெரும்) பாவங்களையும் மன்னிப்பவரும் நீங்களே!

**அன்த ஸத்தாருல் மஸாவி**
தவறுகளை மறைப்பவரும் நீங்களே!

**வமுகீலுல் அஸராதி**
சிரமங்களை நீக்கக் கூடி வரும் நீங்களே!

**யா வலிய்யல் ஹஸனாதி**
நன்மைகளுக்கு பொறுப்பேற்றுள்ளவரே!

**யாரபீஅத் தரஜாதி**
உயாந்த மதிப்புடையவரே!

**கப்பிர் அன்னி துனூபி**
என் பாவங்களைப் போக்கிவிடுங்கள்.

**வ∴புலீ அன் செய்யிஆதி**
என் பாவங்களை அலட்சியம் செய்யுங்கள்.

இத்தனையும் நபி(ﷺ) அவர்களை நோக்கி



சொல்லப்படும் கவி வரிகள். சில உலமாக்கள் மவ்லிதை நியாயப்படுத்த வேண்டும் என்பதற்காக இது நபி (ﷺ) அவர்களை நோக்கிப் பாடும் பாடலல்லவெனக் குதர்க்கம் புரிவர்.

இப்பாடல் வரிகள் “யா நபி ஸலாம் அலைக்கும்” என நபிகளாரை விழித்துப் பாடப்படும் பாடலின் சில வசனங்களாகும். இது நபிகளாரை நோக்கிப் பாடப்பட்டது என்பதற்கு அதுவே போதிய சான்றாகும். இதற்கு மாற்றமாக இந்த பைத்தில் “அன்த” என முன்னிலைப் படுத்திப் பேசப்படுவது அல்லாஹ்வைத்தான் என்று வைத்துக் கொண்டாலும் கூட இந்த பைத் உதைக்கவே செய்கிறது. ஏனெனில், இதே பைத்தில் நாம் குறிப்பிட்ட கவிவரிகளுக்கு முன்னால் “அன்த ஸம்ஸுன் அன்த பதுருன்” சூரியனும் நீ(ங்களே) சந்திரனும் நீ(ங்களே) என்ற வாசகங்கள் இடம்பெறுகின்றன. அப்படியெனில் அல்லாஹ்வை சூரியன் சந்திரன் எனக் குறிப்பிட்ட குற்றத்திற்காளாக நேரிடும். “அன்த” என்பதை அல்லாஹ், ரஸுல் இரண்டில் எவரைக் குறிக்கும் என்றாலும் இணை என்ற குற்றத்திலிருந்து தப்பமுடியாது.

மவ்லிதின் இன்னும் பல இடங்களில் நபி (ﷺ) அவர்களுக்கு எமது பாவங்களை மன்னிக்கும் இறைத்தன்மை இருப்பதாகச் சித்தரிக்கப்படுகிறது. இப்படி நம்புவது அல்லாஹ்வால் மன்னிக்கப்படாத கொடிய “ஷிர்க்” எனும் பெரும் பாவமாகும். இந்தத் தவறான கருத்தை அல்குர்ஆனின் பல வசனங்கள் மறுத்துப் பேசுகின்றன.

அல்லாஹ் அருள் மறையில் பல இடங்களில் நபி (ﷺ) அவர்களையே பாவ மன்னிப்புக் கேட்குமாறு கட்டளையிடுகின்றான்.

**"'எனது இரட்சகனே! (என்னை) நீ மன்னித்து, அருள்புரிவாயாக! நீ அருள் புரிவோரில் மிகச் சிறந்தவனாவாய்' என (நபியே!) நீர் கூறுவீராக!"** (23:118)

**"உமது இரட்சகனின் புகழைக் கொண்டு துதித்து, அவனிடம் நீர் பாவமன்னிப்பும் கோருவீராக! நிச்சயமாக அவன் மன்னிப்புக் கோருவதை அதிகம் ஏற்றுக் கொள்பவனாக இருக்கின்றான்."** (110:3)

நபி(ﷺ) அவர்களுக்கும் பாவங்களை மன்னிக்கும் இறைத் தன்மை இருப்பதாக மவ்லித் கூறுகிறது. அல்குர்ஆன், நபி (ﷺ) அவர்களுக்கே பாவமன்னிப்புக் கேட்குமாறு கூறுகிறது. அண்ணலாரும் ஒரு நாளைக்கு 100 விடுத்தம் பாவமன்னிப்புக் கேட்டுள்ளார். குர்ஆனினதும், அண்ணலாரினதும் கூற்றிற்கு மவ்லித் முரண் படவில்லையா?

**"இன்னும் அவர்கள் மானக்கேடான ஒரு காரியத்தைச் செய்து விட்டாலோ அல்லது தங்களுக்குத் தாங்களே அநீதி இழைத்துக் கொண்டாலோ அல்லாஹ்வை நினைவு கூர்ந்து உடனே தங்களது பாவங்களுக்காக பாவமன்னிப்புத் தேடுவார்கள். <u>அல்லாஹ்வையன்றி பாவங்களை மன்னிப்பவன் யார்?</u> அவர்கள் அறிந்து கொண்டே, தாம் செய்யும் தவறில் நிலைத்திருக்க மாட்டார்கள்."** (3:135)

**"தமக்குத்தாமே (அநியாயம் செய்து) வரம்பு மீறிய எனது அடியார்களே! நீங்கள் அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து விட வேண்டாம். <u>நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப் பாவங்களையும் மன்னிப்பான்.</u> நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையவன் என (நபியே!) நீர் கூறுவீராக!"** (39:53)

இவ்விரு வசனங்களும் மவ்லிதின் மேற்படி



கருத்திற்கு மரண அடியாகும். இந்த வசனங்களை ஏற்றால் மவ்லிதையும் அதன் கருத்துக்களையும் நிராகரிக்க வேண்டும். மவ்லிதை ஏற்றால் அல்குர்ஆனின் மேற்படி வசனங்களை நிராகரித்ததாகும். எதை எற்று, எதை நிராகரிக்கப் போகிறீர்கள்? யாரென்றே தெரியாத ஒரு மனிதரால் இயற்றப்பட்ட மவ்லிதை நியாயப்படுத்து வதற்காக அல்குர்ஆனின் வசனங்களை நிராகரிக்கப் போகிறீர்களா?

## மறைவானவற்றை அறிந்தவன் யார்:

<u>ஆலிமுஸ்ஸிர்ரி வஅக்பா; முஸ்தஜீபுத்த.்.வாத்</u> மறைவானவற்றையும், வெளிப்படையானதையும் அறிந்த ஞானி, பிரார்த்தனைகளுக்குப் பதிலளிப்பவர்.

மேற்படி மவ்லிதின் கவிவரி அல்லாஹ்வுக்கே சொந்தமான மறைவான ஞானத்தில் நபிகளாருக்கும் பங்குள்ளது என்கிறது. அவ்வாறே பிரார்த்தனைகளுக்குப் பதிலளிப்பவன் என்கிற அல்லாஹ்வின் பண்பிலும் பங்குதாரர் என்கிறது. கீழே நாம் தரும் அருள் மறை வசனங்களைச் சற்று கவனித்து மேற்படி கூற்றின் போலித்தன்மையை இனம் காணுங்கள்.

**"அவன் மறைவானவற்றை நன்கறிந்தவன். அவன் பொருந்திக்கொண்ட ஒரு தூதருக்கேயன்றி வேறெவருக்கும் தான் மறைத்து வைத்திருப்பவற்றை வெளிப்படுத்தமாட்டான். நிச்சயமாக அவன் அவருக்கு முன்னும், அவருக்குப் பின்னும் பாதுகாப்பை ஏற்படுத்துகின்றான்."** (72:27)

மேற்படி வசனம் நபிமார்களுக்கு அல்லாஹ் வஹி மூலம் மறைவான செய்திகளில் தான் விரும்புபவற்றை அறிவிக்கலாம் என்பதை உணர்த்துகிறது. ஆயினும்

நபிமார்கள் மறைவானவற்றைத் தாமாக அறிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றவர்களல்லர்.

**"இது மறைவான செய்திகளில் உள்ளதாகும். நாம் இதை வஹியாக உமக்கு அறிவிக்கின்றோம். அவர்களில் யார் மர்யமைப் பொறுப்பேற்பது? என்று (அறிந்துகொள்ள) அவர்கள் தமது பேனாக்களைப் போட்ட போது நீர் அவர்களிடம் இருக்கவில்லை. மேலும், (இது குறித்து) அவர்கள் தர்க்கித்துக் கொண்ட போதும் நீர் அவர்களிடம் இருக்கவில்லை."** (3:44)

மேற்படி வசனமும் மறைவான ஞானம் இல்லை என்பதையும், அல்லாஹ் வஹி மூலம் நபிகளாரிற்கு அறிவித்தால்தான் மறைவான செய்திகளை அவர்களால் அறிய முடியும் என்பதையும் கூறுகிறது.

**"அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவனைத் தவிர வேறு யாரும் அவற்றை அறியமாட்டார்கள். மேலும், தரையிலும் கடலிலும் உள்ளவற்றை அவன் நன்கறிவான். எந்த ஒரு இலையும் அவன் அதை அறியாமல் விழுவதில்லை. பூமியின் இருள்களில் உள்ள விதையோ, பசுமையானதோ, காய்ந்ததோ எதுவாயினும் தெளிவான ஏட்டில் இல்லாமலில்லை."** (6:59)

**"வானங்கள் மற்றும் பூமியை உண்மையாக அவனே படைத்தான். 'குன்' (ஆகுக!) என்று அவன் கூறும் நாளில் அது ஆகிவிடும். அவனது வார்த்தை உண்மையானது. சூர் ஊதப்படும் நாளில் அதிகாரம் அவனுக்கே உரியது. அவன் மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிந்தவன். அவன் ஞானமிக்கவன்; நன்கறிந்தவன்."** (6:73)

இதோ அண்ணலாரை விழித்துக் கூறுவீராகவென அல்லாஹ் கூறுவதைக் கேளுங்கள்.



**"அல்லாஹ்வைத் தவிர வானங்கள் மற்றும் பூமியில் இருப்பவர்கள் எவரும் மறைவானவற்றை அறியமாட்டார்கள். (மரணித்தோர்) எப்போது எழுப்பப்படுவார்கள்? என்பதையும் அவர்கள் உணரமாட்டார்கள் என்று (நபியே) நீர் கூறுவீராக!"** (27:65)

**"அல்லாஹ்வே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிந்தவனே! உனது அடியார்கள் எதில் கருத்து வேறுபாடு கொண்டிருந்தார்களோ, அதில் அவர்களுக்கிடையில் நீயே தீர்ப்பளிப்பவனாவாய் என்று (நபியே!) நீர் கூறுவீராக!"** (39:46)

**"'என்னிடம் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன' என்று நான் உங்களுக்குக் கூறமாட்டேன். மறைவானவற்றை நான் அறியவும் மாட்டேன். நிச்சயமாக நான் ஒரு வானவர் என்றும் உங்களுக்குக் கூற மாட்டேன். எனக்கு வஹியாக அறிவிக்கப்படுவதைத் தவிர வேறெதையும் நான் பின்பற்றுவ தில்லை என்று (நபியே!) நீர் கூறுவீராக! 'பார்வையற்றவனும் பார்வையுடையவனும் சமமாவார்களா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?' என்று கேட்பீராக!"** (6:50)

இத்தனை வசனங்களையும் புறக்கணித்து விட்டு, இதனைத் தெளிவுபடுத்தும் ஏராளமான நபிமொழிகளை யெல்லாம் ஒதுக்கித்தள்ளிவிட்டு புகழாரம் என்ற பெயரில் ஏகத்துவக் (தௌஹீத்) கொள்கையை கவிஞர் குழி தோண்டிப் புதைக்கிறார். சுப்ஹான மவ்லித் மாத்திரமன்றி முஹிதீன் மவ்லித், ஸாஹுல் ஹமீத் மவ்லித் ஆகிவற்றிலும் கூட குறித்த இறை நேசர்களுக்கு மறைவான ஞானம் இருப்பதாகவே சித்தரிக்கப்படுகிறது. குர்ஆனுக்கு முரண்படும் மேற்படி மவ்லித்களை என்ன செய்யப் போகிறீர்கள்?

## பிரார்த்தனைக்குப் பதிலளிப்பவன் யார்?:

“முஸ்தஜீபுத் த.்.வாத்” பிரார்த்தனைகளுக்குப் பதிலளிப்பவர் என்ற வாசகமும் ஷிர்க்கை ஏற்படுத்தும் வாசகமாகும்.

நபி(ﷺ) அவர்கள் கூட பல சந்தர்ப்பங்களில் அல்லாஹ்விடம் பிரார்த்தித்துப் பாதுகாப்புத் தேடியிருப்பதை நாம் அறிவோம்.

**“‘மனிதர்களின் இரட்சகனும், மனிதர்களின் அரசனும், மனிதர்களின் (உண்மையாக) வணக்கத்திற்குரியவனுமாக இருப்பவனிடம், மறைந்திருந்து தீய எண்ணங்களை ஏற்படுத்துபவனின் தீங்கை விட்டும் நான் பாதுகாவல் தேடுகிறேன்’ என (நபியே!) நீர் கூறுவீராக!”** (114:1)

**“அதிகாலையின் இரட்சகனிடம் அவன் படைத்தவற்றின் தீங்கைவிட்டும் நான் பாதுகாப்புத் தேடுகிறேன் என (நபியே!) நீர் கூறுவீராக!”** (113:1)

அண்ணலார் அவர்கள் பத்ர் யுத்த நேரத்தில் நீண்டநேரம் அல்லாஹ்விடம் பாதுகாவலும், உதவியும் வேண்டிப் பிரார்த்தனை புரிந்தார்கள் என்பது நாம் அறிந்ததே! அதற்கு இவ்வாறு அல்லாஹ் பதிலளித்தான்.

**“உங்கள் இரட்சகனிடம் நீங்கள் உதவி தேடிய போது, ‘நிச்சயமாக நான் தொடர்ச்சியாக ஆயிரம் மலக்குகளைக் கொண்டு உங்களுக்கு உதவுவேன்’ என்று அவன் உங்களுக்குப் பதிலளித்தான்.”** (08:09)

அண்ணலாரிற்கும் அவ்வாறே அவ்லியாக்களுக்கும் பிரார்த்தனைகளைக் கேட்டுப் பதிலளிக்கும் ஆற்றல் இருப்பதாக இம்மவ்லித்கள் சித்தரிப்பதால் ஏதேனும்



ஆபத்து நிகழ்ந்து விட்டால் அல்லாஹ் என்றழைப்பதை விட்டு விட்டு “யாமுஹ்யியித்தீன்” என அழைத்து பாமர மக்கள் அல்லாஹ்விற்கு இணைவைக்கும் கொடிய குற்றத்தைச் செய்து வருகின்றனர். இது அன்றைய மக்கத்துக் காபிர்களை விட கீழான நிலைக்கு எம்மை அழைத்துச் செல்கின்றது. அவர்கள் கூட ஆபத்து ஏதும் நேரிட்டால் அல்லாஹ்வை மாத்திரமே உதவிக்கு அழைப்பார்கள்.

**“அவர்கள் கப்பலில் ஏறிப் பயணித்தால் கலப்பற்றவர்களாக அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டு அவனை அழைப்பார்கள். அவன் அவர்களைக் கரையின்பால் காப்பாற்றும் பொழுது அவர்கள் (அவனுக்கு) இணைவைக்கின்றனர்.”** (29:65)

இதே கருத்தை 17:67, 62:63, 64 ஆகிய வசனங்களும் தருகின்றன. காபிர்கள் கூட ஆபத்து வந்தால் அல்லாஹ்வை அழைத்திருக்க, ஆபத்து ஏற்படும் போது கூட அல்லாஹ்வை விட்டு விட்டு பிறரை அழைக்கும் நிலைக்கு எம்மை இட்டுச் சென்ற மவ்லூத் களை தூக்கியெறியும் நன்னாள் எந்நாளோ?.

**“(அவர்கள் இணை வைப்பவை சிறந்த வையா? அல்லது) துன்பத்திற்குள்ளானவன் அவனை அழைக்கும் போது (அவனுக்குப்) பதிலளித்து, கஷ்டத்தை நீக்கி, உங்களைப் பூமியின் தலைமுறையினர்களாக ஆக்கிய(வன் சிறந்த)வனா? அல்லாஹ்வுடன் வேறு கடவுள் உண்டா? குறைவாகவே நீங்கள் நல்லுபதேசம் பெறுகின்றீர்கள்.”** (27;62)

இவ்வாறு கேட்டால் “மவ்லித் கூட்டத்தினர்” பலரின் பெயரைக் குறிப்பிட்டு, இவர்களும் காப்பாற்றுவர் எனப்பதிலளிக்கின்றனர்! இக்கொடுமையிலிருந்து விடுபட நீங்கள் விரும்பவில்லையா?

**"'என்னை அழையுங்கள். நான் உங்களுக்குப் பதிலளிப்பேன். எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடிக்கின்றார்களோ, அவர்கள் இழிவடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்' என உங்கள் இரட்சகன் கூறுகின்றான்."**
(40:60)

**"(நபியே!) என்னைப் பற்றி எனது அடியார்கள் உம்மிடம் கேட்டால், நிச்சயமாக நான் அருகிலேயே இருக்கின்றேன். (எனக் கூறுவீராக!) பிரார்த்திப்பவன் என்னை அழைத்தால், அழைப்புக்கு விடையளிப்பேன். எனவே, அவர்கள் நேர்வழி பெறும் பொருட்டு என்னையே அழைக்கட்டும். மேலும், என்னையே நம்பிக்கை கொள்ளட்டும். "** (2:186)

அல்குர்ஆன் அண்ணலாரையும் அல்லாஹ்விடம் பிரார்த்திக்குமாறு ஏவியுள்ளது. அவர்களும் அதைச் செய்திருக்க, மேற்படி குர்ஆன் வசனங்கள் பிரார்த்தனை களுக்குப் பதிலளிப்பவன் (முஸ்தஜீபுத்த.ஃவாத்) அல்லாஹ்தான் என அடித்துக்கூற, மவ்லித் "இல்லை இல்லை" என அருள்மறையின் கருத்துக்களை மறுக்கிறது. இதன் பிறகும் உண்மையான முஸ்லிம் ஒருவன் மவ்லித்திற்கு வக்காலத்து வாங்குவானா?

மேலே நாம் குறிப்பிட்டவை போக ஏராளமான "ஷிர்க்"கான வசனங்களை மவ்லிதில் காணலாம்.

**"யா ஸய்யிதஸ் ஸாதாதி ஜி.ஃதுக காஸிதா, அர்ஜூஹிமாக பலா துகய்யிப் மக்ஸதி."**

"தலைவர்களுக்கெல்லாம் தலைவரே! உங்களை நாடியே உங்களிடம் வந்தேன். உங்கள் பாதுகாப்பை வேண்டுகிறேன். எனது நாட்டத்தைத் தோல்வியுறச் செய்யாதீர்கள்."



**"பஸத்து க.ஃப்ப பாகதி வன்னதமி"**

"எனது வறுமை, கவலை காரணமாக கையேந்துகிறேன்."

**"அர்ஜூஜஸீல பழ்லிகும் வல் கரமி"**

"உங்களது அளப்பரிய அருளையும் வள்ளல் தன்மையையும் நம்பியுள்ளேன்."

**"முஸ்தஷ்பிஅன் நஸீல ஹாதல் ஹரமி"**

"இந்த ஹரமி(மதீனாவி)ல் தங்கியிருக்கும் உங்களின் பரிந்துரையை வேண்டுகிறேன்."

**"பலாஹிலூனி பி தவாமில் மததி"**

"என்னை நிரந்தரமான உதவி கொண்டு கவனித்து விடுங்கள்."

இவ்வாறு மவ்லித் பூராகவும் நபி(ﷺ) அவர்களிடம் நேரடியாகப் பிரார்த்தித்து பல விடயங்கள் வேண்டப்படுகின்றன. அத்தனையும் இணையை ஏற்படுத்தும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இவ்வாறிருக்க இதை ஓதி புண்ணியம் பெறுவது எவ்வாறு? புண்ணியம் தான் வேண்டாம்; தண்டனையாவது கிடைக்காமல் இருக்குமா? கொடிய நரகில் நிரந்தரமாகத் தள்ளிவிடும் "ஷிர்க்குடைய வாசகங்களை ஓதிவிட்டுத் தப்பி விட முடியுமா?

## குர்ஆன் ஓதுவோம் வாருங்கள்:

அல்குர்ஆன் அல்லாஹ்வின் வார்த்தை என்பதையும், அதில் அணுவளவு கூட பொய்யோ, கற்பனைக்கதைகளோ இல்லை எனவும் நாம் உறுதியாக நம்பியுள்ளோம். இந்த அருள்மறையை விட மவ்லிதிற்கு முக்கியத்துவம் கொடுப்பது கொடுமையல்லவா? மவ்லித்

ஓதப்படும் போது ராகமிட்டு, நீட்டி, நிதானித்து பாடும் இவர்கள் குர்ஆனை எக்ஸ்பிரஸ் வேகத்தில் ஓதுகின்றனரே! இது அநியாயமில்லையா? அல்குர்ஆனை ஓதுவதால் கிடைக்கும் மகிமைகள் பற்றி சற்று சிந்தித்துப் பாருங்கள்!

“இந்தக் குர்ஆனை நன்கு திருத்தமாக ஓதுவீராக!...” (73:4)

**“எவர் குர்ஆனை இராகமிட்டு அழகாக ஓதவில்லையோ அவர் எம்மைச் சார்ந்தவரில்லை.” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அபூலுபாபா பஸீரிப்னு அப்துல் முன்திர்
நூல்: அபூதாவூத்- 1469, தாரமீ- 3817,
இப்னுமாஜா- 1337, அஹ்மத்- 1476

**“குர்ஆனில் ஒரு பகுதியும் (மனப்பாடம் இல்லாத உள்ளம்) பாழடைந்த இல்லத்திற்குச் சமமாகும்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரழி)
நூல்: தாரமீ 3624

**“யார் குர்ஆனில் ஒரு எழுத்தை ஓதுகின்றாரோ அதன் மூலம் அவருக்கு ஒரு நன்மை கிடைக்கும். அந்த ஒரு நன்மை அதன் பத்து மடங்காகப் பெருக்கப்படும்...”**

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரழி)
நூல்: திர்மிதி- 2910

**“அல்லாஹ் இந்தக் குர்ஆன் மூலம் ஒரு கூட்டத்தை உயர்வடையவும், இன்னுமோர் கூட்டத்தை இழிவடையவும் செய்கிறான்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: உமரிப்னுல் கத்தாப்(ரழி)
நூல்: முஸ்லிம்- (817-269), இப்ன ஹிப்பான்- 771,



தாரமீ-3686, இப்னுமாஜா- 218,
அஹ்மத்- 232

**“ஒரு மனிதர் 18வது அத்தியாயம் சூறதுல் கஃபை ஓதிக் கொண்டிருந்தார், அவருக்கு அருகில் இரு கயிறுகளால் கட்டப்பட்ட குதிரை இருந்தது. அப்போது வானிலிருந்து ஒரு நிழல் இறங்கி வருவதுபோல் தென்பட்டது. இது கண்டு குதிரை மிரண்டது. காலையில் இது பற்றி நபி(ﷺ) அவர்களிடம் அவர் குறிப்பிட்ட போது, நபி(ﷺ) அவர்கள் அது ஸகீனத் எனும் அமைதியாகும். குர்ஆன் ஓதப்பட்டதால் அது இறங்கியது; என்ற கருத்தைத் தெரிவித்தார்கள்.”**

அறிவிப்பவர்: பர்ரா இப்னு ஆஸிப் பரா.:.(ரழி)
நூல்: புகாரி- 5011, முஸ்லிம்- (795-240)

**“சூரதுல் பகரா ஓதிக்கொண்டிருந்த ஒரு தோழர் வானில் ஒளி விளக்குகள் போன்ற நிழலைக் கண்டார், இது பற்றி நபிகளாரிடம் கூறிய போது, ‘உமது (குர்ஆன் ஓதும்) தொனியால் உம்மை நெருங்கிய மலக்குகளே அவை’ எனப் பதிலளித்தார்கள்.”** (நூல் : புஹாரி- 5018)

**“உங்களுடைய வீடுகளை (தொழப்படாத, ஓதப்படாத) கப்ரிஸ்தானம் போல் ஆக்கிவிடாதீர்கள். நிச்சயமாக ஷைத்தான் சூரதுல் பகரா ஓதப்படும் வீட்டை விட்டு வெருண்டோடுகின்றான்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அபூ ஹுரைரா(ரழி)
நூல்: முஸ்லிம்- (780-212), அபூதாவூத்- 2042,
திர்மிதி- 2877

**“குர்ஆன் அதனையுடையவர்களுக்கு மறுமையில் பரிந்துரையாக வரும்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அபூ உமாமா துல் பாஹிலீ(ரழி)
நூல்: முஸ்லிம்- 804-252

**“அல்குர்ஆனைத் திருத்தமாக ஓதியவர் மறுமையில் அல்குர்ஆனை ‘லவ்ஹுல் மஹ்பூழில்’ பதிந்த கண்ணியத்திற்குரிய மலக்குகளுடன் இருப்பார். குர்ஆனை ஓதமுடியாமல் கஷ்டப்பட்டு திக்கித் திக்கி ஓதியவருக்கு (கஷ்டப்பட்டதற்கு, ஓதியதற்கு என) இரண்டு கூலிகள் வழங்கப்படும்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: ஆயிஷா(ரழி)
நூல்: புகாரி, முஸ்லிம்

**“குர்ஆனையுடையவருக்கு மறுமையில் நீ எவ்வாறு உலகில் அல்குர்ஆனை நீட்டி, நிதானித்து திருத்தமாக ஓதினாயோ அவ்விதமே ஓதுவீராக! நீ ஓதி முடிய எவ்வளவு அவகாசம் எடுக்கிறதோ, அது வரை சுவனத்தில் உன் ‘தரஜா’ கூடிக்கொண்டே செல்லும்”** (ஹதீஸின் கருத்து) எனக் கூறப்படும்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹிப்னு அம்ரிப்னுல் ஆஸ்(ரழி)
நூல்: அபூதாவூத்- 1464, திர்மிதி- 2914

இவ்வாறு எண்ணற்ற நபி மொழிகள் குர்ஆன் ஓதுவதன் சிறப்புப் பற்றி சிலாகித்துப் பேசுகின்றன.

பரகத் நாடி, நன்மை கிடைக்குமென நம்பி, பொய்யும், கற்பனையும் கலந்த, எம்மை நரகில் தள்ளிவிடும் சிக்கலான அம்சங்கள் நிறைந்த, எவர் எழுதினார் என்பது கூடப் புரியாத, பித்அத்தான மவ்லிதுகளை ஓதி நேரத்தையும், பணத்தையும் வீணாக்கி நரகை விலைகொடுத்து வாங்குவதை விட, ஒரு எழுத்துக்குப் பத்து நன்மை வீதம், கோடிக் கணக்கான நன்மைகளைப் பெற்றுத் தரும், றஹ்மத்துடைய மலக்கு, இறங்கும், “ஸகீனத்” எனும் அமைதியைப் பெற்றுத் தரும், ஷைத்தானைத் துாரப்படுத்தும், மறுமையில் மலக்குகளோடு இருக்க, சுவனத்தில் அந்தஸ்த்து உயர



உதவிடும், சிபாரிசு செய்யும் அல்லாஹ்வின் அருள் மறையை ஓதி அதன் மூலம் உயர்வடையும் சமூகமாக மாற, மவ்லித் குப்பைகளைக் குழி தோண்டிப் புதைத்து விட்டு, குர்ஆனைக் கையிலெடுத்து ஓதுவோம் வாருங்கள்!

# உத்தம நபியை உரிய முறையில் நேசிப்போம்!:

இஸ்லாத்தின் அடிப்படை “லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்” – வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மத்(ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராவார்கள் எனும் ஷஹாதத் கலிமாதான். இதுதான் இஸ்லாத்தின் அத்திவாரம். இதன் மீதுதான் இஸ்லாத்தின் கொள்கை-கோட்பாடுகள், வணக்க-வழிபாடுகள், ஷரீஆ சட்டங்கள் என்பன கட்டியெழுப்பப்பட்டுள்ளன.

நாம் “நபி(ﷺ) அவர்களை அல்லாஹ்வின் தூதர்” என சாட்சி சொல்வது என்பது வெறும் வெற்று வார்த்தைகளால் மாத்திரம் உறுதியாகிவிடாது.

**“(நபியே!) நயவஞ்சகர்கள் உம்மிடம் வந்தால், ‘நிச்சயமாக நீர் அல்லாஹ்வின் தூதரே என நாங்கள் சாட்சி கூறுகின்றோம்’ என்று கூறுவர். நிச்சயமாக நீர் அவனது தூதர் என்பதை அல்லாஹ் நன்கறிவான். நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் பொய்யர்களே என அல்லாஹ் சாட்சி கூறுகின்றான்.”** (63:1)

அல்லாஹ்வின் தூதரை உண்மையில் நேசிக்காது அவரை “இறைத் தூதர்” என்று முறையாக நம்பாது நீங்கள் “அல்லாஹ்வின் தூதர் என நாம் சாட்சி

கூறுகின்றோம்” என அவர்கள் கூறிய சாட்சியத்தை அல்லாஹுதஆலா ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை இந்த வசனம் தெளிவுபடுத்துகின்றது. எனவே, நாம் கூறும் சாட்சியம் அல்லாஹ்வினால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்றால் அந்தச் சாட்சியத்தில் முக்கிய சில பண்புகள் அடங்கியிருக்க வேண்டும்.

இஸ்லாத்தின் அத்திவாரத்தின் ஒரு பகுதியான “முஹம்மத்(ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என நான் சாட்சி கூறுகின்றேன்” என்ற சாட்சி உண்மையாக வேண்டுமென்றால் நம்மிடம் பின்வரும் பண்புகள் வெளிப்பட்டேயாக வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களை உண்மைப்படுத்துவது அவசியம். எல்லா முஸ்லிம்களும் அவர் “அல்லாஹ்வின் தூதர்” என உண்மைப்படுத்துகின்றனர். ஆனால், நபியை உண்மைப்படுத்துவது என்பது அவர் அறிவித்த அனைத்தையும் உண்மைப்படுத்துவதைக் குறிக்கும்.

“நான் நபியை ஏற்றுக்கொள்கின்றேன்” அவர் கூறிய இன்னின்ன செய்திகள் பகுத்தறிவுக்கும், விஞ்ஞானத்திற்கும், நடைமுறைக்கும் பொருத்த மில்லாதவை. அதற்கு என்னால் உடன்பட முடியாது” என்ற தோரணையில் பேசுவது நபியை உண்மைப் படுத்துவதாகாது. அடுத்து, நபி(ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் வஹியை மனிதர்களுக்கும், ஜின்களுக்கும் எத்திவைப்பதற்காக அனுப்பப்பட்ட இறுதித் தூதர் என நம்புவதும் நபியை உண்மைப் படுத்துதல் என்பதில் அடங்கும்.

✍ நபி(ﷺ) அவர்களுக்குக் கட்டுப்படுவதும், அவர்களது தீர்ப்பை எத்தகைய அதிருப்தியும் இல்லாது முழு



மனதுடன் ஏற்றுக்கொள்வதும் அவசியமாகும். நபி(ﷺ) அவர்களது ஸுன்னாவைப் பின்பற்றுவதும், அதற்கு மாற்றமானதை விட்டு விடுவதும் ஷஹாதாக் கலிமாவில் அடங்கக் கூடியதாகும்.

✍ அடுத்து, நபி(ﷺ) அவர்களை நேசிக்க வேண்டும். இது சாதாரண நேசம் அல்ல. தனது பெற்றோர், பிள்ளைகள், மற்றோர் ஏன்!, தனது உயிரை விட அதிகமாக நபியை நேசிக்க வேண்டும். இந்த நேசம் என்பது வாய் வார்த்தையில் மட்டுமல்லாது நடைமுறையிலும் இருக்க வேண்டும்.

நபி(ﷺ) அவர்களைக் கண்ணியப் படுத்துவதும், அவர்களுக்கு உதவி செய்வதும், அவர்கள் மூலம் கூறப்பட்ட செய்திகளை நடைமுறைப்படுத்துவதும், நபி(ﷺ) அவர்களுக்கு எதிராகக் கூறப்படும் குற்றச்சாட்டுக்களை மறுப்பதும் இந்த நபி மீதான நேசத்தின் சான்றுகளாக இருக்கும்.

எமது குழந்தைகளுக்குப் பெயர் வைக்கும் போது “முஹம்மத்” எனப் பெயர் வைத்து விட்டால் நாம் நபியை நேசித்ததாகிவிடாது. அல்லது அவர்களது பிறந்த தினத்திற்கு விழா எடுத்தால் அது நபி மீது நேசம் கொண்டதற்குச் சாட்சியாகவும் அமைந்து விடாது.

மேலே நாம் கூறியது போன்று நமது ஷஹாதத் கலிமா ஏற்றுக் கொள்ளப்படுவதற்காக நாம் ஆற்ற வேண்டிய பணிகள் சிலவற்றைச் சுருக்கமாக நோக்குவோம்.

✍ நபி(ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதற்கான

சான்றுகளை உங்கள் சிந்தனையில் பதியச் செய்யுங்கள். இந்தச் சிந்தனையின் அடிப்படை குர்ஆன்தான். எனவே, நபி(ﷺ) அவர்களது தூதுத்துவம் பற்றிக் கூறும் குர்ஆன் வசனங்களை சிந்தித்துப் பாருங்கள்.

✍ நபி(ﷺ) அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்பதைக் கூறக்கூடிய குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ் களையும் கற்றுக்கொள்ளுங்கள்.

✍ இந்த உம்மத்தில் உள்ள அறிஞர்களின் தியாகத்தின் மூலமும், நுணுக்கமான ஆய்வின் மூலமும் நபி(ﷺ) அவர்களது ஸுன்னாவை அல்லாஹ் பாதுகாத்துள்ளான். ஏனைய எந்த சமூகமும் கவனம் செலுத்தாத அளவுக்கு இந்த உம்மத் நபியின் ஸுன்னாவைப் பாதுகாப்பதற்கும், அதில் நுழைந்த கலப்படங்களைக் களைவதற்கும் செய்த தியாகங்களை அறிந்துகொள்ளுங்கள்.

(அப்போதுதான் ஸுன்னாவின் பெறுமதியையும், போலிச் செய்திகளைப் புறக்கணிக்க வேண்டியதன் அவசியத்தையும் உங்களால் உணர முடியும்.)

✍ நபி(ﷺ) அவர்களை நீங்கள் நேசிக்கின்றீர்கள் என்பதை நேரடியாகக் காட்டுங்கள். உள்ளத்தளவில் அவரது உயர்ந்த பண்புகளை நினைவு கூறுங்கள். நீங்கள் ஒரு நடிகனையோ, விளையாட்டு வீரனையோ, அரசியல் தலைவனையோ விரும்பினால் அவனது பெயர், பிறந்த இடம், வரலாறு, செய்த சாதனைகளை அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டுகின்றீர்கள்.

நபியை நேசிக்கும் நாம், நபி(ﷺ) அவர்களது



பரிபூரணமான பண்புகள், நடைமுறைகள், வாழ்க்கை முறைகளை அறிந்துகொள்வதில் ஆர்வமற்றிருக்க லாமா? எனவே, நபி(ﷺ) அவர்களைப் பற்றிப் பேசும் “ஷமாயிலுத் திர்மிதி” (தமிழில்: நபிகள் நாயகம் – நேர்முக வர்ணனை) போன்ற புத்தகங்களைப் படித்து அறிந்து கொள்ள வேண்டும்.

✍ அவரது மகத்துவத்தையும், சிறப்பையும் அறிந்திருக்க வேண்டும். “நபி(ﷺ) அவர்கள் தனது தூதுத்துவப் பணியை கொஞ்சம் கூடக் குறைவின்றிப் பரிபூரணமாக நிறைவேற்றினார்கள்” என நம்ப வேண்டும். எங்கள் அனைவரை விடவும் அவர் சிறந்தவர் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். (இந்த நம்பிக்கை உறுதியாக இருந்தால்தான் நபிமொழிக்கு மாற்றமாக யார் பேசினாலும் நம்மால் அதைப் புறக்கணிக்க முடியும். இல்லையென்றால் “இவர் பெரிய அறிஞர்”, “சேவை செய்தவர்” என்றெல்லாம் காரணம் கூறி நபிமொழியை விடத் தனி நபரின் கூற்றுக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்து விடுவோம்.)

✍ நபி(ﷺ) அவர்கள்தான் எமது வழிகாட்டி; நபிவழியே நம் வழி. அல்லாஹ்வின் அன்பைப் பெற அவரது வழிகாட்டல் ஒன்றின் மூலம் மட்டுமே முடியும் என்பதை உறுதிப்படுத்துவதாக எமது வாழ்க்கை அமைய வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்கள் இந்த உம்மத்தின் மீது பேரன்பும், கிருபையும் கொண்டவர்கள் என்பதை நம்ப வேண்டும்.

நபி(ﷺ) அவர்களது கண்ணியத்தையும், அவர்களுக்கு அல்லாஹ்விடம் இருக்கும் உயர்ந்த ஸ்தானத்தையும் அல்லாஹ் அவர்களைக் கண்ணியப்படுத்தியுள்ள

விதத்தையும் விளக்கும் குர்ஆனிய வசனங்களையும், ஹதீஸ்களையும் அறிந்துகொள்ள வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களை நேசிக்குமாறு நாம் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளோம் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களைக் கண்ணியப்படுத்துமாறு நாம் ஏவப்பட்டுள்ளோம்.

அல்லாஹுதஆலா தன் திருமறையில்

**“நம்பிக்கை கொண்டோரே! உங்கள் சப்தங்களை நபியின் சப்தத்திற்கு மேலால் உயர்த்தாதீர்கள். மேலும், உங்களில் சிலர் மற்றும் சிலருடன் சப்தமிட்டுப் பேசுவது போன்று அவருடன் சப்தமிட்டுப் பேசாதீர்கள். (ஏனெனில்) நீங்கள் உணராத நிலையில் உங்கள் செயல்கள் அழிந்துவிடும்.”**

**“நிச்சயமாக எவர்கள் தமது சப்தங்களை அல்லாஹ்வின் தூதரிடத்தில் தாழ்த்திக் கொள்கிறார்களோ, அவர்களது உள்ளங்களை அல்லாஹ் பயபக்திக்காக பரிசுத்தமாக்கினான். அவர்களுக்கு மன்னிப்பும் மகத்தான கூலியும் உண்டு.”**

(49:2, 3)

**“இத்தூதரை அழைப்பதை உங்களுக்கிடையில் சிலர் சிலரை அழைப்பது போன்று ஆக்கிக்கொள்ளாதீர்கள். உங்களில் யார் மறைவாக நழுவிச் செல்கிறார்களோ அவர்களை அல்லாஹ் நன்கறிவான். அவரின் கட்டளைக்கு மாறுசெய்வோர் தமக்கு ஒரு துன்பம் நேருவதையோ, அல்லது தமக்கு நோவினை தரும் வேதனை ஏற்படுவதையோ அஞ்சிக்கொள்ளட்டும்.”** (24:63)

இன்று நபி(ﷺ) அவர்கள் நம்மிடையே



இல்லையென்றாலும் அவர்களது வழிமுறையும், பொன்மொழிகளும் இருக்கின்றன. நபிவழிக்கும், நாயக வாக்கியங்களுக்கும் கண்ணியமளிப்பது எமது மார்க்கக் கடமையாகும்.

நபி(ﷺ) அவர்களைப் பாதுகாப்பது எமது மார்க்கக் கடமையாகும். இந்த வகையில் அவர்களை நோவினை செய்யும் விதத்தில் அல்லது அவர்களது அந்தஸ்தைக் குறைக்கும் விதத்தில் செய்யப்படும் அனைத்துச் சதிகளுக்கு எதிராகவும் போராடுவதும் எமது மார்க்கக் கடமையாகும். இதனை,

**“அவர்கள்தான் (எழுத்தறிவற்ற) உம்மி நபியான இத்தூதரைப் பின்பற்றுவார்கள். அவர் குறித்து எழுதப்பட்டிருப்பதை, தங்க ளிடமுள்ள தவ்ராத்திலும் இன்ஜீலிலும் கண்டு கொள்வார்கள். அவர் அவர்களுக்கு நன்மையை ஏவி, தீமையை விட்டும் அவர் களைத் தடுப்பார். தூய்மையானவற்றை அவர்களுக்கு ஆகுமாக்கி, தீயவற்றை அவர்களுக்குத் தடை செய்வார். மேலும், அவர்களது சுமையையும், அவர்கள் மீதிருந்த விலங்குகளையும் அவர்களை விட்டும் நீக்குவார். எவர்கள் அவரை நம்பிக்கை கொண்டு, அவரைக் கண்ணியப்படுத்தி, அவருக்கு உதவியும் செய்து, அவருடன் இறக்கப்பட்டிருக்கும் (குர்ஆன் எனும்) ஒளியையும் பின்பற்றுகின்றார்களோ அவர்கள்தாம் வெற்றியாளர்கள்.”**

(7:157)

என்ற மேற்படி வசனம் தெளிவாக உணர்த்துகின்றது.

✍ எனது சக்திக்கும், ஆற்றலுக்கும் ஏற்ப முடிந்த அளவு நபி(ﷺ) அவர்களுக்கு “நுஸ்ரத்” - உதவி செய்வேன் என உண்மையான உள உறுதிப்பாட்டை எடுத்தல் வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களை முறையாக நேசித்தால் சுவனத்தில் அவர்களுடன் இருக்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்கும். ஒரு நபித் தோழர், “நான் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நேசிக்கின்றேன்” என்று கூறிய போது, “நீ யாரை நேசித்தாயோ அவர்களுடன் இருப்பாய்” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள். இந்த மகத்தான பாக்கியத்தை மனதில் வைத்து அவர்களை உண்மையாக நேசிக்க வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்கள் மீதுள்ள எமது நேசத்தை வெளிப்படுத்துமுகமாக நபியவர்கள் கற்றுத் தந்த “ஸலவாத்”தை அதிகமதிகம் ஓத வேண்டும். குறிப்பாக நபியவர்கள் நினைவுகூரப்படும் போதும், அதானுக்குப் பின்னரும், வெள்ளிக் கிழமை தினம் மற்றும் சகல சந்தர்ப்பங்களிலும் “ஸலவாத்”து ஓதி அந்த நன்மையைப் பெற்றுக்கொள்ள முனைய வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்கள் மீது நேசம் கொண்டவர்கள் நபி(ﷺ) அவர்களது வாழ்க்கை வரலாற்றையும், அது தரும் படிப்பினைகளையும் அதிகமதிகம் படித்துப் பயன்பெற வேண்டும். “நபியை நேசிக்கின்றேன்!” என்று கூறிக் கொண்டு அவரது வாழ்வு பற்றிப் படிக்காமலும், அவரது வாழ்வைப் பற்றிப் பிடிக்காமலும் இருக்க முடியாது.

✍ நபி(ﷺ) அவர்களது பொன்மொழிகளைப் படிப்பதில் ஆர்வம் காட்ட வேண்டும். புகாரி, முஸ்லிம், திர்மிதி, அஹ்மத், அபூதாவூத் போன்ற ஹதீஸ் கிரந்தங்களும், ரியாளுஸ் ஸாலிஹீன், புலூஹுல் மறாம் போன்ற ஹதீஸ் தொகுப்புக்களும் இன்று தமிழில் வெளிவந்துள்ளன. இந்த மொழிபெயர்ப்புக்கள் மூலம் நபிமொழிகளை அறிந்து கொள்ளலாம்.



✍ நபி(ﷺ) அவர்களின் ஸுன்னாக்களைப் பின்பற்றுவதில் ஆர்வம் காட்ட வேண்டும். வாழ்வின் அனைத்துத் துறைகளுக்கும் நபி(ﷺ) அவர்களையே முன்மாதிரியாகக் கொள்ள வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களது எந்த ஸுன்னத்தையும் இழிவுபடுத்துவதை விட்டும், கேலி செய்வதை விட்டும் தவிர்ந்திருத்தல் வேண்டும். இன்று எம்மில் சிலர் தாடி வைத்தல் போன்ற ஸுன்னாக்களை இழிவு படுத்துகின்றனர். இது நபியை இழிவுபடுத்துவது போன்று குற்றமாகக் கருதப்படும்.

✍ மக்கள் மத்தியில் ஸுன்னா முக்கியத்துவம் பெறும் போதும், நடைமுறைப்படுத்தப்படும் போதும், மேலோங்கும் போதும் மகிழ்வடைய வேண்டும்.

✍ சில ஸுன்னாக்கள் மக்கள் மத்தியில் மறைந்து போயிருப்பது குறித்து கவலை கொள்ள வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களையோ, அவர்களது ஸுன்னாவையோ விமர்சிப்பவர்கள் மீது கோபம் கொள்வதும் நபி மீதான நேசத்தை வெளிப்படுத்தும் அம்சமாகும்.

✍ நபி(ﷺ) அவர்களது மனைவியர், அவர்களது சந்ததியினர் மற்றும் நபி(ﷺ) அவர்களது குடும்பத்தைச் சேர்ந்த முஃமின்கள் அனைவரையும் நேசிக்க வேண்டும்.

✍ நபி(ﷺ) அவர்களது தோழர்களான ஸஹாபாக்கள் அனைவரையும் நேசிக்கவும், மதிக்கவும் வேண்டும். அத்துடன் மார்க்க அறிவு, பேணுதல், அல்லாஹ்விடம் பெற்றுள்ள அந்தஸ்து அனைத்திலும் அவர்கள்,

பின்னால் வந்தவர்களை விட உயர்வானவர்கள் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

✍ "உலமாக்கள் நபிமார்களின் வாரிசுகள" எனப் போற்றப்படுவதால் நபிவழியைப் போதிக்கும் உலமாக்களை நேசிப்பதும், கண்ணியப்படுத்துவதும் நபி(ﷺ) அவர்கள் மீதான எமது நேசத்தை வெளிப்படுத்தும் அம்சமாக அமையும்.

## குடும்ப மட்டத்தில் நபியை நேசிக்க..

எமது குடும்ப அமைப்பில் நபி மீது நாம் கொண்டுள்ள நேசத்தை வெளிப்படுத்தப் பின்வருவன போன்ற செயல் திட்டங்களை முன்னெடுக்கலாம்.

✍ நபி(ﷺ) அவர்களை நேசிக்கும் அடிப்படையில் குழந்தைகளை வளர்த்தல், பயிற்றுவித்தல்.

✍ உண்பது, உறங்குவது, மலசல கூடத்துக்குச் செல்வது போன்ற விடயங்களில் குழந்தைகள் நபிவழியைப் பின்பற்றப் பயிற்றுவித்தல்.

✍ நபி(ﷺ) அவர்களது வரலாற்றைப் பிள்ளைகளுக்குக் கற்பித்தல். அதற்கான நூற்கள், இறுவட்டுக்களைக் குழந்தைகளுக்கு அன்பளிப்புச் செய்தல்.

✍ சின்னச் சின்ன நபிமொழிகளையும், அன்றாட வாழ்வில் ஓத வேண்டிய அவ்றாதுகளையும் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுத்தல்.



## கல்விக் கூடங்கள்:

நீங்கள் ஒரு ஆசிரியராகவோ, அதிபராகவோ இருக்கலாம். அல்லது பல்கலைக்கழக மாணவ அமைப்புக்களின் பொறுப்புதாரிகளாகவோ, பேராசிரியர் களாகவோ இருக்கலாம். நீங்கள் அல்லாஹ்வின் தூதரை உண்மையாக நேசிக்கின்றீர்கள் என்பதை நடைமுறையில் நிரூபித்தாக வேண்டும். அதற்காகப் பின்வரும் செயற்திட்டங்களை முன்னெடுக்கலாம்.

✍ உங்கள் மாணவர் மனதில் நபி(ﷺ) அவர்கள் மீதான நேசத்தை விதையுங்கள். (ஒரு கம்யூனிஸவாதி கார்ல் மார்க்ஸ் மீது பற்றை விதைக்கும் விதத்தில் தனது பாடத்தையும், உதாரணத்தையும் அமைத்துக் கொள்ளும் போது ஒரு முஸ்லிம் நபி(ﷺ) அவர்கள் மீது நேசத்தை விதைக்க முயலக் கூடாதா?)

✍ நபி(ﷺ) அவர்களது பன்முக ஆளுமைகளை விபரிக்கும் விதத்தில் அதிகமான செயலமர்வுகளை நடத்தலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது வரலாறு குறித்த ஆய்வுகளை உற்சாகப்படுத்தி இது தொடர்பான நூலாக்க முயற்சிகளை ஊக்குவிக்கலாம்.

✍ பொது வாசிகசாலைகளில் நபி(ﷺ) அவர்களது வாழ்வு, வரலாறு, ஆளுமை குறித்துப் பேசும் நூற்களை வைக்கலாம். பிற மத சகோதரர்களது வாசிகசாலைகளுக்கும் நாமே இது தொடர்பான நூற்களை அன்பளிப்புச் செய்யலாம். இல்லை யென்றால் இஸ்லாத்தின் எதிரிகளின் நூற்கள்தான் அந்த இடத்தை நிரப்பும்.

நபி(ﷺ) அவர்களைப் பற்றி அறிய விரும்பும் ஒரு அந்நிய வாசகன் இஸ்லாத்தின் எதிரிகளின் நூற்களை எடுத்துத்தான் வாசிப்பான். இதைத் தவிர்ப்பதற்கும், நபி(ﷺ) அவர்கள் பற்றிய உண்மையான, உயர்வான வரலாறு பிற மக்களைச் சென்றடையவும் இந்தத் திட்டம் உதவும்.

✍ நபி(ﷺ) அவர்களது வாழ்வு, வழிகாட்டல் தொடர்பான வருடாந்தப் போட்டி நிகழ்ச்சிகளை நடத்தலாம். இதில் பிற மத சகோதரர்களும் பங்குகொள்ள வாய்ப்பளிக்கலாம். இதன் மூலம் நபி(ﷺ) அவர்களது வாழ்வை அனைவரும் ஆர்வத்துடன் படிக்கும் நிலையை உருவாக்கலாம். இதற்காகக் கட்டுரை, கவிதை, பேச்சுப் போட்டிகளை நடத்தலாம்.

✍ இளைஞர்-யுவதிகளுக்காக விடுமுறை நாட்களில் ஆழமான, விரிவான கருத்தரங்குகளை ஏற்பாடு செய்யலாம்.

## அறிஞர்கள் – தாயிகள் (அழைப்பாளர்கள்):

நீங்கள் மக்களுக்கு மார்க்கத்தைப் போதிக்கும் இமாமாகவோ, த∴வாப் பணியில் ஈடுபாடு கொண்டவராகவோ, அறிவைத் தேடும் மாணவராகவோ இருந்தால் பின்வரும் பணிகளூடாக நபி(ﷺ) அவர்கள் மீது நீங்கள் வைத்திருக்கும் பற்றையும், பாசத்தையும் பறை சாட்டலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது பிரச்சாரத்தினதும், அவர்களது தூதுத்துவப் பணியினதும் தனித்துவங்களை மக்களுக்குத் தெளிவுபடுத்தலாம்.



✍ நபி(ﷺ) அவர்கள் முழு மனித சமுதாயத்திற்குமான வழிகாட்டியாவார்கள். இந்த வகையில் குல, நிற, கோத்திர, பிரதேச வேறுபாடுகளையும் தாண்டி அனைத்துலக மக்களிடமும் நபி(ﷺ) அவர்களது தூதுச் செய்தியைத் தன் சக்திக்கு ஏற்பச் சுமந்து செல்வதன் மூலமும், அதற்கான முயற்சிகளை முடுக்கி விடுவதன் மூலமும் உங்கள் அன்பை உறுதி செய்யலாம்.

✍ அழகிய நடையில் நபி(ﷺ) அவர்களது சிறப்புக்களையும், அவர்களைப் பின்பற்றும் சமூகத்தினது தனித்தன்மையையும் பிற மதத்தவர்களுக்கு எடுத்துரைத்தல்.

✍ நபி(ﷺ) அவர்களது வாழ்வை மக்களுக்குத் தெளிவுபடுத்துதல், நபித்துவத்திற்கு முந்திய, பிந்திய அவர்களது தூய வாழ்வையும், அவர்களது சிறப்பான பண்பாடுகளையும் தெளிவுபடுத்துதல்.

✍ நபி(ﷺ) அவர்கள் தமது குடும்பத்தினர், அண்டை அயலவர், தோழர்கள் என்போருடன் எவ்வாறு உறவுகளைப் பேணினார்கள் என்பதை விளக்குதல்.

✍ நபி(ﷺ) அவர்கள் தமது எதிரிகளுடனும், யூத-கிறிஸ்தவர்களுடனும், இணைவைப்போருடனும் எத்தகைய மனித நேயத்துடன் நடந்து கொண்டார்கள் என்பதைத் தெளிவுபடுத்துதல். குறிப்பாக நபி(ﷺ) அவர்கள் முஸ்லிம் அல்லாதவர்களுடன் மூர்க்கத்தனமாக நடந்து கொண்டார்கள் என இஸ்லாத்தின் எதிரிகளாலும், இதை சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களாலும் விமர்சிக்கப்படும் இந்தச் சூழலில் நபி(ﷺ) அவர்கள் அந்நியர்களுடன்

மேற்கொண்ட அன்னியோன்யமான உறவு குறித்து தெளிவுபடுத்துதல் அவசியமாகும்.

- காலையில் கண்விழித்ததிலிருந்து இரவு உறங்கும் வரை அவர்களது அன்றாட நடவடிக்கை எப்படி அமைந்திருந்தது என்பதைத் தெளிவுபடுத்தல்.
- குத்பா உரைகளில் குறிப்பிட்ட ஒரு நேரத்தை நபி(ﷺ) அவர்கள் மீது பற்றையும், பாசத்தையும் ஏற்படுத்தத்தக்க அவர்களது அழகிய வாழ்க்கையை மக்களுக்கு முன்வைக்கப் பயன்படுத்துதல்.

- தொழுகையில் நபி(ﷺ) அவர்களது வாழ்வோடு சம்பந்தப்பட்ட ஆயத்துக்கள் ஓதப்பட்டால் 5 அல்லது 10 நிமிடங்கள் தொழுகை முடிந்ததும் அந்த ஆயத்தின் அர்த்தம் நபி(ﷺ) அவர்கள் அதைக் கடைப்பிடித்த விதம் அல்லது அது என்ன காரணத்திற்காக அருளப்பட்டது என்பதைச் சுருக்கமாக மக்களுக்கு விளக்கலாம்.

- குர்ஆன் வசனங்களைப் பாடமிட ஆர்வமூட்டுவது போன்று சின்னச் சின்ன ஹதீஸ்களை மனனமிடப் பயிற்றுவிக்கும் மஜ்லிஸ்களை ஏற்பாடு செய்யலாம்.

- நபி(ﷺ) அவர்களது செயற்பாடுகளையும், வழிமுறைகளையும் விமர்சிப்பவர்களை விட்டும் விலகி இருப்பதன் அவசியத்தை மக்களுக்கு உணர்த்த வேண்டும்.

- நபி(ﷺ) அவர்கள் மீது நேசம் வைப்பதிலும், அவர்களது சிறப்பைப் பேசுவதிலும் எல்லை மீறிச் சென்று விடக் கூடாது என்பதை மக்களுக்குத் தெளிவுபடுத்துதல். இந்த எல்லை மீறும் போக்கு எம்மை அறியாமலேயே எம்மை ஷிர்க்கில் தள்ளி விடும் என மக்களை விழிப்படையச் செய்தல் வேண்டும்.



- நபி(ﷺ) அவர்களது உண்மையான வரலாற்றைக் கற்பதை மக்களுக்கு ஆர்வமூட்ட வேண்டும்.

- நபி(ﷺ) அவர்களுக்குச் சிறப்புச் சேர்த்தல் என்ற பெயரில் இட்டுக்கட்டப்பட்ட செய்திகளை மக்களுக்கு இனம் காட்டி நபி(ﷺ) அவர்களது தூய வரலாற்றின் தூய்மைத் தன்மையைப் பாதுகாக்க வேண்டும்.

- நபி(ﷺ) அவர்களது வாழ்வு, வரலாறு குறித்து மக்களிடம் காணப்படும் ஐயங்களைத் தெளிவுபடுத்துதல் வேண்டும்.

## அறிஞர்கள், சிந்தனையாளர்கள், ஊடக வியலாளர்கள், எழுத்தாளர்கள்:

இவர்கள் தனி நபராக இருந்து சமூகத்தில் பாரிய தாக்கத்தை விளைவிக்கக் கூடியவர்கள். இந்த வகையில் நபி(ﷺ) அவர்கள் மீது பற்றும், பாசமும் கொண்ட இத்தகைய ஊடகவியலாளர்களும், சிந்தனையாளர்களும் பின்வருமாறு பணியாற்றலாம்.

- சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பயன்படுத்தி நபி(ﷺ) அவர்களது பண்புகளையும், தனித்தன்மைகளையும் மக்களுக்கு எடுத்து வைக்கலாம். உதாரணமாக, நபி(ﷺ) அவர்களை குண்டு வைப்பவராகக் கார்டூன் வரையப்பட்டு அது பரபரப்பை ஏற்படுத்திய சந்தர்ப்பத்தில் நபி(ﷺ) அவர்கள் காபிர்களுடன் நடந்து கொண்ட விதம், எதிரிகளை மன்னித்த அவர்களது

பண்பு, அவர்களின் அன்பான வாழ்வு என்பவற்றை மக்களுக்கு எடுத்து வைக்கலாம். அதே போன்று நபி(ﷺ) அவர்கள் கற்றுக் கொடுத்த போர் தர்மங்கள், ஒழுங்குகள் என்பவற்றை பகிரங்கப்படுத்தலாம்.

- ✍ நபிவழியில் குறை காணும் கருத்துக்களையோ, கட்டுரைகளையோ, செய்திகளையோ வெளியிடக் கூடாது.

- ✍ ஊடகவியலாளர்கள், பத்திரிகையாளர்கள், செய்தியாளர்களுக்கான செயலமர்வுகளை ஏற்படுத்தி நபி(ﷺ) அவர்களது உண்மையான வரலாற்றைப் பல்வேறு கோணங்களில் முன்வைக்கலாம். அதன் மூலம் அந்த ஊடகவியலாளர்கள் நபி(ﷺ) அவர்கள் குறித்து தப்பும் தவறுமாகச் செய்தி வெளியிடுவதைத் தவிர்க்கலாம்.

- ✍ நபி(ﷺ) அவர்கள் குறித்து மாற்று மத அறிஞர்கள் வெளியிட்டுள்ள நல்ல கருத்துக்களை மக்கள் மத்தியில் பரப்பலாம்.

- ✍ நாட்டில் உள்ள மாற்று மதம் சார்ந்த அறிஞர்கள், சிந்தனையாளர்களை அழைத்து நபி(ﷺ) அவர்களது வாழ்வு, அவரது அரசியல்-சமுகப் பணிகள் குறித்து விரிவான கலாசார மாநாடுகளை நடத்தலாம்.

- ✍ முஸ்லிம் அல்லாதவர்கள் மட்டும் பங்குகொள்ளும் விதத்தில் நபி(ﷺ) அவர்களின் வாழ்க்கை வரலாறு குறித்த போட்டி நிகழ்ச்சிகளை தொலைத் தொடர்பு சாதனங்கள் ஊடாக நடத்தலாம். அவர்கள் ஆக்கங்கள் தயாரிக்கத்தக்க தகவல்களை நாமே நூற்களாக வெளியிடலாம். இதன் மூலம் நபி(ﷺ) அவர்களது வாழ்வை மாற்று மத நண்பர்களும் படிக்கும் சூழலை உண்டுபண்ணலாம். அந்தப் போட்டிகளில் வெற்றி பெறுவோருக்குப் பெருமதியான பரிசில்களை வழங்கலாம். வெற்றி பெற்றோரின் ஆக்கங்களைத் தேசிய நாளேடுகளிலும் வெளிவரச் செய்து அதை மக்கள் மயப்படுத்தலாம்.



- ✍ நபி(ﷺ) அவர்கள் குறித்துப் பேசும் கட்டுரைகள், சிறுவர் இலக்கியங்கள், சிற்றேடுகள் என்பவற்றைப் பல மொழிகளிலும் வெளியிடலாம்.

- ✍ நபி(ﷺ) அவர்களை நேசிப்பது மார்க்கக் கடமை. அவர்களை நேசிப்பது என்பது அவர்களை கண்ணியப்படுத்துவது, பின்பற்றுவது என்பவற்றை உள்ளடக்கியது என்பதைத் தெளிவுபடுத்தும் கட்டுரைகளையும், வெளியீடுகளையும் சமூகத் தலைவர்கள் பார்வைக்கு உட்படுத்தலாம்.

## நிறுவனங்களின் பணி:

முஸ்லிம் சமூகத்தில் இயங்கும் நிறுவனங்கள் நபி(ﷺ) அவர்கள் மீதுள்ள பற்றையும், பாசத்தையும் பின்வரும் வழிகளில் வெளிப்படுத்தலாம்.

- ✍ நபி(ﷺ) அவர்களது உண்மையான வாழ்வை உலகுக்கு எடுத்துக் கூறும் ஒலி, ஒளி நாடாக்கள், புத்தகக் கண்காட்சிகளை ஏற்பாடு செய்யலாம்.

- ✍ பிரதேச, தேசிய மட்டங்களிலான கருத்தரங்குகளை ஏற்பாடு செய்து முஸ்லிம் சிறார்கள்-இளைஞர்களுக்கு நபி(ﷺ) அவர்களது வரலாற்றைப் போதிப்பதுடன், மாற்று மதத் தலைவர்கள் அறிஞர்கள், அரசியல்

தலைவர்கள் போன்றோர் நபி(ﷺ) அவர்களது வாழ்வை அறிந்துகொள்ளத்தக்க கருத்தரங்குகளை ஏற்பாடு செய்யலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது வாழ்வை விபரிக்கும் இலவச வெளியீடுகளை விநியோகம் செய்யலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது ஸுன்னாவைப் பரப்புவதற்காகப் பல்வேறு வழிகளில் உழைத்த நல்லறிஞர்களை இனங்கண்டு அவர்களையும், அடுத்தவர்களையும் ஊக்கப்படுத்துமுகமாகப் பரிசில்களையும், நினைவுச் சின்னங்களையும் வழங்கலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது பன்முக ஆளுமைகளை விபரிக்கக் கூடிய வெளியீடுகளை மாற்று மொழிகளில் அவற்றை வெளியிட்டு அவற்றைப் பல்கலைக் கழகங்கள், அரச-தனியார் பணிமனைகள், நூலகங்கள், வாசிகசாலைகளுக்கு விநியோகிக்கலாம்.

✍ வருடாந்த நினைவு மலர்களை வெளியிட்டு அதன் மூலம் நபி(ﷺ) அவர்களது பண்பாடு, ஒழுக்கம், வழிகாட்டல்களை விபரிக்கலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது தூய வாழ்வை விபரிப்பதற்கும், அவர்கள் குறித்து எழுப்பப்படும் ஐயங்களுக்குப் பதிலளிப்பதற்குமெனத் தனியான அறக்கட்டளையை நிறுவி அதன் மூலமாக நூல் வெளியீடு, மொழியாக்கப் பணி, வலைப்பின்னல் எனப் பணிகளை விரிவுபடுத்தலாம்.



## இணையத் தளங்களை நடத்துவோர்:

இணையத் தளங்கள் இன்றைய தொடர்பூடங்களில் பிரிக்க முடியாத அம்சமாக மாறியுள்ளன. இணையத் தளப் பாவனையாளர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. இணையத் தளங்களை நடத்தும் முஸ்லிம்கள் நபி(ﷺ) அவர்கள் மீது தாம் கொண்ட அன்பை வெளிப்படுத்தப் பின்வரும் விதத்தில் பணியாற்றலாம்.

✍ இந்த மார்க்கத்தின் சிறப்பம்சங்களை இணையம் மூலம் தெளிவுபடுத்தலாம்.

✍ இஸ்லாம் அனைத்துத் தூதர்களுக்கும் கொடுக்கும் முக்கியத்துவத்தையும், அவர்கள் மீது அன்பு வைக்க இஸ்லாம் கட்டளையிட்டுள்ள செய்தியையும் தெளிவுபடுத்தலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது தூதுத்துவத்தின் சிறப்பம்சங்களையும், தனித்துவங்களையும் தெளிவுபடுத்தும் தனிப் பகுதியை இணையத்தில் ஏற்படுத்தலாம்.

✍ இணையத்தில் அரட்டையில் (chat) உரையாடும் போது நபி(ﷺ) அவர்களது வரலாற்றையும், அவர்கள் போதித்த கொள்கையையும் ஆய்வு செய்யுமாறு மாற்று மதச் சகோதரர்களிடம் வேண்டுகோள் விடுக்கலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது சிறப்பம்சங்களையும், அவர்களது குறிப்பான சில ஹதீஸ்களையும் மாற்று மதத்தவர்களுக்கு (E-mail) அஞ்சல் செய்யலாம்.

உதாரணமாக நபியவர்களின் மன்னிக்கும் பண்பு, விட்டுக் கொடுக்கும் போக்கு, சிறுவர்களுடன் அவர்கள் நடந்து கொண்ட விதம், இஸ்லாம் வழங்கும் பெண்ணுரிமை போன்ற அம்சங்களைக் குறிப்பிடலாம்.

✍ நபி(ﷺ) அவர்களது வாழ்வைப் பற்றிப் பேசும் சிறந்த நூற்கள், உரைகள் என்பவற்றை இணையத் தளத்தைப் பயன்படுத்தி மக்கள் மயப்படுத்தலாம்.

## செல்வந்தர்களும், இஸ்லாமிய அரசும்:

எமது சமுகத்திலுள்ள செல்வந்தர்களும், இஸ்லாமிய அரசுகளும் நபி(ﷺ) அவர்கள் மீதுள்ள உண்மையான தமது அன்பையும், மரியாதையையும் வெளிப்படுத்தக் கடமைப்பட்டுள்ளனர். வெறுமனே நபி(ﷺ) அவர்களுக்காக “மீலாத் விழா” எடுத்து விட்டு அல்லது “மவ்லூது” ஓதி விருந்து படைத்து விட்டு நாம் நபி(ﷺ) அவர்களுக்குரிய அன்பை வெளிப்படுத்தி விட்டோம் எனச் சிலர் எண்ணிக்கொண்டிருக்கின்றனர். இது தவறாகும்.

இஸ்லாமிய அரசுகள், செல்வந்தர்கள் என்போர் நாம் மேலே குறிப்பிட்ட அனைத்து அம்சங்களையும் ஊக்குவித்து ஒத்துழைப்பு நல்க வேண்டும். செல்வந்தர்கள், சாதாரண நூல் வெளியீடுகள், கவிதை வெளியீடுகள் என்பவற்றுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தில் 10 வீதம் கூட இஸ்லாமிய வெளியீடுகளில் ஆர்வம் காட்டுவதில்லை.

இஸ்லாமிய அரசுகளைப் பொறுத்த வரையில் நபி(ﷺ) அவர்கள் மீதான தமது பாசத்தை வெளிப்படுத்தும்



இத்தகைய பணிகளை அரசின் அடிப்படைக் கடமைகளில் ஒன்றாகக் கொள்ள வேண்டும்.

இன்றைய முஸ்லிம் அரசுகள் சினிமா, கலை, கலாசாரம் என்ற பெயரில் நடக்கும் அநாச்சாரங்களுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தைக் கூட நபி(ﷺ) அவர்களது தூய வாழ்வை மக்கள் மன்றத்திற்கு வைப்பதற்கு - அளிப்பதற்கு தவறி விட்டன. இருப்பினும் வருடம் ஒரு முறை “மீலாத்” நடத்தி, நபி மீதுள்ள பாசத்தை வெளிப்படுத்தி விட்டோம் என்று திருப்தி காண்கின்றன. அல்லது நடிக்கின்றன எனக் கூறலாம்.

எனவே, எமது ஈமானின் ஒரு அம்சமான நபி(ﷺ) அவர்கள் மீதுள்ள நேசத்தை வெறும் வெற்று வார்த்தைகளிலும் உண்ணும் உணவிலும் மட்டும் காட்டும் இந்தப் போக்கைக் கைவிட்டு விட்டு நபி(ﷺ) அவர்கள் மீதுள்ள நேசத்தை உள்ளத்து உணர்வுகளாலும், எமது ரூபத்திலும், நடத்தையிலும் வெளிக்காட்ட முனைவோமாக!

# ஆசிரியரின் பிற நூல்கள்...

01. இறைநம்பிக்கைக்கு எதிரான சவால்கள்.
02. அகீதா - ஒரு விளக்கம் (மொழிபெயர்ப்பு)
03. அல்லாஹ் எங்கும் உள்ளானா?
04. தாயத்து ஈமானுக்கு ஆபத்து.
05. பெண்களும் மூடநம்பிக்கைகளும் - சகுணம்.
06. ஷீஆக்களின் சீர்கேடுகள்.
07. காதியானிகள் - ஓர் எச்சரிக்கை.
08. திருத்தப்படவேண்டிய தீர்வுகள்.
09. இஸ்லாமிய ஒழுக்கவியல்.
10. தற்பெருமை வேண்டாம்!
11. பொறாமை வேண்டாம்!
12. பெண் இனத்தின் முன்மாதிரிகள்.
13. முதல்நிலை முஸ்லிம் பெண்கள்.
14. பெண்களே உங்களுக்குத்தான்!
15. நற்செய்தி பெற்ற நபித்தோழர்கள்.
16. குர்ஆனியப் பெண்கள்.
17. நபித்தோழர் தியாக வரலாறு.
18. முஸ்லிம் சிறார்களுக்கு நபி(ﷺ) அவர்கள் நவின்ற நற்கதைகள்.



19. இப்றாஹீம் நபி - வரலாறு (சிறுவர் இலக்கியம்)
20. உள்ளம் அமைதி பெற...
21. நபிவழியில் நம்துஆ.
22. அழைப்பாளனின் அணிகலன்கள் (மொழிபெயர்ப்பு)
23. அழைப்புப் பணியின் அவசியமும் அனுகுமுறையும்.
25. குற்றவாளிக் கூண்டில் தஸ்லிமா நஸ்லின்.
26. மீலாதும் மவ்லிதும் - ஓர் இஸ்லாமியப் பார்வை.